# கல்கி

## பொருளடக்கம்

பரிதாபி ஆனி, 19 ★ ஜூலை 2, 1972





''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 23-00 | ரூ. 11-50 |
| இதர நாடுகள் | ரூ. 50-00 | ரூ. 25-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 27-00 | ரூ. 13-50 |

# பாலுஸேரி பேனிபிட் சிட் பண்டு
## பிரைவேட் லிமிடெட்

(ஸ்தாபிதம்: 1947)

"வீணு விகார்" — 17-A, ∴பிளாங் ரோடு,
ஷண்முகானந்தா ஹாலுக்கு அருகில்
சயான் (கிழக்கு) பம்பாய்-22. D. D.
டெலிபோன்: 471455
தபால் பெட்டி 6769 :: தந்தி: "GROWRICH"

ஏலம் கேட்ட பிறகு டிவிடெண்ட் அடையும் வசதியுள்ள [illegible]

**ஜூலை 1972 புதிய குருப்புகள்**

**குறுகிய காலம்**

25 மாதங்கள் – 25 அங்கத்தினர்கள்

முதல் ஏலத் தேதி: 9-7-72

| வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சீட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| B | 100/– | 2,500/– |
| C | 50/– | 1,250/– |
| F | 25/– | 625/– |
| G | 20/– | 500/– |

**நீண்ட காலம்**

40 மாதங்கள் – 40 அங்கத்தினர்கள்

முதல் ஏலத் தேதி: 30-7-72

| வகுப்பு | மாதச் சந்தா ரூ. | சீட்டுத் தொகை ரூ. |
|---|---|---|
| LTE | 500/– | 20,000/– |
| LTF | 250/– | 10,000/– |
| முதல் ஏலத் தேதி 16-7-72 | | |
| LTG | 125/– | 5,000/– |
| LTM | 50/– | 2,000/– |

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்
**"பாலுஸேரி பில்டிங்ஸ்"**
3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி : 414 :: சென்னை – 5
கிளைகள் : பெங்களூர் – கல்கத்தா – புது டெல்லி

இலவச பிரசுரத்திற்கு எழுதுங்கள்
சீட்டுகள் ஒதுக்குதல் கம்பெனியின் உரிமையைப் பொறுத்தது
வேலை நேரம் : காலை 8 மணி முதல் 10-30 வரை; மாலை 4 மணி முதல் 7-30 வரை
வார விடுமுறை: திங்கட்கிழமை

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

கல்கி

மலர் 31
இதழ் 49



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
— பாரதியார்

# சத்தியந்தான் வேண்டும்; சாமர்த்தியமல்ல

இந்தியா—பாகிஸ்தான் பிரச்னைகள் எல்லாவற்றுக்கும் சுமுகமான, கண்ணியமான முறையில் நிரந்தரமான முடிவு காண ஸ்ரீமதி இந்திரா — அதிபர் புட்டோ உச்ச கட்ட பேச்சு வார்த்தைகள் வழிவகுக்கும் என்று நாடு முழுவதும் ஆவலாக எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது.

அந்தரங்கசுத்தமாக இந்தியா — பாகிஸ்தானிடையே உள்ள பிரச்னைகளைத் தீர்க்கவும், இந்திய உபகண்டத்தில் நிரந்தர அமைதியை நிலைநாட்டவும் பாடுபடப் போவதாகப் பிரதமர் இந்திரா காந்தி அடிக்கடி சொல்லியிருப்பதை நாட்டு மக்கள் வரவேற்கின்றனர்.

நமது சமீப வெளிநாட்டுப்பயணத்தில் கூட, குறிப்பாக ப்ராக் நகரத்தில் அவர் தமது கருத்தை விளக்கிக் கூறியிருக்கிறார். ''பாகிஸ்தான் மக்களும் சரி, இந்திய மக்களும் சரி, தாங்கள் குறைந்த அளவில் பெற்றுள்ள பொருட் செல்வத்தைப் போரிலும், போருக்கு ஆயத்தம் செய்வதிலுமே செலவழித்துக் கொண்டிருப்பது நல்லதல்ல. ஆக்க வேலைகளுக்கும், மக்கள் சுபிட்சத்துக்கும்தான் இவ்விரு நாட்டுச் செல்வமும் செலவிடப்பட வேண்டும். அவ்வாறு செய்வதற்கு, இரண்டு நாடுகளும் விரோதிகள் என்ற நிலைமையை விட்டு, நண்பர்கள் என்ற நிலைமைக்கு வர வேண்டுவது அவசியமாகும்'' என்று கூறியிருக்கிறார். இதுவே உண்மையை முற்றிலும் உணர்ந்த நிலை.

இதே மனோபாவத்துடன் பாகிஸ்தான் அதிபர் புட்டோவும் உச்சகட்ட சம்பாஷணைகளை நடத்துவாரா என்பது ஒரு கேள்விக்குறியாகவே இருக்கிறது. அவருடைய சமீப காலப் பேச்சுக்களும், நடவடிக்கைகளும் இந்தச் சந்தேகத்தை எழுப்பும் வகையில் அமைந்திருக்கின்றன. திரு புட்டோ தமது மக்களில் ஒவ்வொரு பகுதியையும் தனித் தனியே கூட்டி ஆலோசனை நடத்துவதும், ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொரு விதமாகப் பேசுவதும், பிற நாடுகளிடையே தமக்கு ஆதரவு தேடச் சந்தர்ப்பத்துக்குத் தகுந்தபடி கொள்கைகளை மாற்றிக் கொள்வதும், இழந்துவிட்ட ஆயுத பலத்தை அதிகரித்துக் கொள்ள உலக வல்லரசுகளிடத்தில் எடுக்கும் முயற்சிகளும், சமாதானத்தில் பிரியமுள்ள நமது நாட்டு மக்களுக்கு மனச்சோர்வை உண்டாக்கி, அவரது நல்லெண்ணத்தைச் சந்தேகிக்கச் செய்கின்றன.

நாம் விட்டுக் கொடுப்பதாகப் பாகிஸ்தான் மக்கள் நினைக்கக் கூடாதென்றே புட்டோ இவ்விதம் செய்வதாகவும் இது உச்ச கட்ட சம்பாஷணைகளைப் பாதிக்காது என்றும் சில வட்டாரங்களில் கூறப்படுகிறது.

அதுவே உண்மை என்று நாமும் எண்ணலாம். எனினும் அதிபர் புட்டோவின் பேச்சுக்களில் சாமர்த்தியம் அதிகமாகத் தென்படுகிறதே தவிர சத்தியத்தைக் காணவில்லை. இது சந்தோஷப்படக் கூடிய விஷயம் அல்ல. சாமர்த்தியத்தினால் எந்தப் பிரச்னைக்கும் நிரந்தர முடிவு காண முடியாது. சாமர்த்தியம் அதிக சாமர்த்தியத்தைத்தான் தூண்டிவிடும். பேச்சு வார்த்தைகள் வாதத்தில் இறங்கி, தர்க்கம் புரிவதில் யார் அதிகக் கெட்டிக்காரர் என்பதில்தான் போய் முடியும். பிரச்னைகள் தீராது. பிரச்னைகளைத் தீர்க்கச் சத்தியந்தான் வேண்டும்; சாமர்த்தியமல்ல. இரண்டு பக்கத்திலும் சத்தியப் பேச்சும், சத்திய மனப்பான்மையும் நிலவ இறைவன் அருள் புரியட்டும்.

சத்தியமேவ ஜயதே என்பது நம் அரசாங்கத்தின் லட்சிய வாசகம். பாரதப் பிரதமரின் சத்தியமும் நல்லெண்ணமும் பாகிஸ்தான் அதிபர் புட்டோவுக்கும் பரவி, அவரையும் சத்தியப் பாதையில் இட்டுச் செல்லட்டும்! இதனால் தெற்காசியா முழுவதிலுமே ஜனநாயக வாழ்வைக் காப்பதற்கு வழி பிறக்கும். இந்தியா - பாகிஸ்தான் உச்சகட்ட மகாநாட்டினால் இந்த நல்ல பெரும் விளைவு ஏற்பட அனைவரும் பிரார்த்திப்போமாக!

# தமிழ் நாட்டிலே...

**• தீரன் •**

## முதல் வகுப்பிலேயே கழகமும் அண்ணாவும்

தமிழ் நாட்டுப் பாட நூல் நிறுவனத்தின் 'புதிய பாடத் திட்டப்படி இயற்றப்பட்ட' முதல் வகுப்புத் தமிழ்ப் புத்தகத்திலேயே சந்தேகத்துக்குரிய சில மாறுதல்களைக் காண்கிறோம். 'புதிய திட்டத்தின்படி' என்பதற்கு நாம் நினைக்கும் அர்த்தத்தை இங்குள்ள அரசாங்கம் நினைக்கவில்லை என்பது இப்போது மிகத் தெளிவாகவே நமக்கு விளங்கிவிட்டது. அரசாங்கம் நினைக்கும் 'புதிய திட்டம்' என்பது தங்களுடைய கட்சியைப் பற்றி நேரடியாகவோ முடியாவிட்டால் மறைமுகமாகவோ பிரசாரம் செய்வதுதான் என்பது அறிவிக்கப்பட்டுவிட்டது. இந்த ஆண்டு வெளியான முதல் வகுப்புத் தமிழ்ப் புத்தகத்தில் ய, ர, ல, வ, ழ, ள முதலிய எழுத்துக்களுக்கு உதாரண வார்த்தைகள் கட்டிக் காட்டுகையில், 'ழ' என்ற எழுத்துக்கு உதாரண வார்த்



தையாக 'கழகம்' என்று அச்சிட்டிருக்கிறார்கள். பாடத்தின் பெயர் 'பழங்கள்' என்பது. (தமிழ் முதல் வகுப்பு பக்கம் 15) இங்கே 'ழ'வுக்கு உதாரணம் காட்ட வேண்டிய சமயத்திலும் 'பழம்' என்றே காட்டியிருக்க முடியும். ஒரு முதல் வகுப்புக் குழந்தைக்குத் தின்பண்டமான 'பழம்' என்ற வார்த்தையை விட அதிகமாகப் புரியும் வார்த்தை வேறு ஒன்று இருக்க முடியாது. அப்படி இருக்க முடியுமானால் மாநிலத்தை அறிமுகப்படுத்தும் பதமான 'தமிழகம்' என்ற வார்த்தையை அங்கே உதாரணமாகப் போட்டிருக்கலாம். ஆனால் 'புதிய பாடத் திட்டப்படி' முதல் வகுப்புக்குத் தமிழ் நூல் வெளியிட்டிருக்கும் அரசு பாட நூல் நிறுவனத்துக்குப் 'பழத்தையும்' 'தமிழகத்தையும்' விடக் 'கழகத்தை'க் குழந்தைகளுக்கு அறிமுகப்படுத்துவது தான் முக்கியமான நோக்கமாக இருந்திருக்கும் போலும். 'கழகம்' என்ற பதம் சூதாடு மிடம் என்ற பொருளில் (குறள் 937) வருகிறது. வகுப்பில் பாடம் நடத்தும் ஆசிரியர் அவ்வளவு மோசமான அர்த்தத்தை முதல் வகுப்புக் குழந்தைக்குச் சொல்லிக் கொடுத்து விடமாட்டார் என்று நாம் நம்பலாம். ஆனால் ஒருவேளை தமிழ் நாட்டை ஆளும் கட்சியான கழகத்தைப் பற்றிக் குழந்தைகளுக்கு எப்படியாவது சொல்லிக் கொடுத்துவிட நிர்ப்பந்தப்படுத்துவதற்குத் துணிந்துதான் இப்படிப் போட்டிருக்கிறார்கள் போலிருக்கிறது.

இதே போல 'ணு' என்ற எழுத்துக்கு உதாரணமாக 'அண்ணு' (பக்கம் 16) என்று அச்சிடப்பட்டிருக்கிறது. 'ணே' என்ற எழுத்துக்குக் 'கண்ணே' என்று உதாரணம் போட்டிருப்பது போல் 'ணு' என்ற எழுத்துக்கும் 'கண்ணு' என்றே போட்டிருக்கலாம். 'கண்ணன்' என்ற பதமும் குழந்தைகளுக்கு அதிகம் அறிமுகமானது. ஆனால் 'புதிய பாடத் திட்டப்படி' 'அண்ணு'வை முதல் வகுப்புக் குழந்தைகள் மனத்தில் சிரமப்பட்டு வலிய முயன்றுவது நினைத்து விட வேண்டும் என்று முயலுகையில் அப்பாவிக் கடவுள் கண்ணனுக்கு ஏது இடம்?

ஆகதோஷ் முகர்ஜி, யூகலிப்ட்ஸ் மரம் ஆகிய பெயர்கள் அகட்டோஷ் முக்கர்ஜி, யூகலிப்டசு மரம் என்று அச்சிடப்பட்டுள்ளன. ஷ், ஜி ஆகிய எழுத்துக்கள் வரலாமானால் 'ஸ்' மட்டும் என்ன பாவம் செய்ததோ? நல்லவேளையாக 5ம் வகுப்புப் பாடப்புத்தகத்தில் எஸ். எஸ். அருணகிரிநாதர் என்பவரின் பெயர் எசு. எசு. அருணகிரிநாதர் என அச்சிடப்படவில்லை. எஸ். எஸ். அருணகிரிநாதருக்கு ஒரு நியாயம், ஆகதோஷ் முகர்ஜிக்கு ஒரு நியாயமா? விந்தைதான்.

இதைப் பார்த்தபோது, "ஜெயலலிதாவை செயலலிதா என்று குறிப்பிடாமல் ஜெயலலிதா என்றே பிரசுரித்துவிட்டு ராஜாஜியை மட்டும் ராசாசியாக்குவானேன்?" என்று ராஜாஜி அவர்களே திரு முரசொலி மாறனுக்கு முன்பு எழுதிய ஒரு கடிதம் நினைவுக்கு வருகிறது. இதைத் தமிழ் எழுத்தாளர் சங்கக் கூட்டம் ஒன்றில் முரசொலி திரு மாறனே குறிப்பிட்டு, 'இக் கடிதம் வந்த பின்னர் ராஜாஜி என்றே பிரசுரிக்கிறோம்' என்பதாகக் கூறியிருக்கிறார்.

## பத்திரிகைச் சுதந்திரம் எங்கே?

தி. மு. க. ஆட்சியில் 'பத்திரிகைச் சுதந்திரம்' என்ற பதத்தின் அர்த்தமே வேறு. அதைப் பிரித்து அர்த்தம் கூறும்போது 'பத்திரிகைகளுக்கு உள்ள சுதந்திரம்' என்பதை விடப் 'பத்திரிகைகளின் மேல் தி. மு. க. ஆட்சிக்கு உள்ள சுதந்திரம்' என்றுதான் பிரித்துப் பொருள் சொல்ல முடியும் போலிருக்கிறது. ஆளும் கட்சிக்கு எதிரான பத்திரிகைகளை ஒடுக்க அவர்கள் மேற்கொள்ளும் முயற்சிகள் அதைத்தான் நிரூபிக்கின்றன. மிகவும் கேவலமான முறையில் நிரூபிக்கின்றன.

சென்ற வாரம் நகரின் தினசரிகளில் ஒன்றான 'அலை ஓசை' இதழின் அலுவலகம் சூறையாடப்பட்டதும், கார்கள் எரிக்கப்பட்டதும், 'டைப்'புகள் வாரி இறைக்கப்பட்டதும் அந்த இதழின் உரிமையாளர்களில் ஒருவரான வேலூர் நாராயணன் தாக்கப்பட்டதும் காலையிலிருந்து குண்டர்கள் தாக்கிய ஒவ்வொரு முறையும் அந்தப்

## ஆத்திசூடியும் ஆட்சிக்குச் சூடும்!

தமிழக அரசு வெளியிட்டுள்ள பாட புத்தகங்களில் ஔவையார் அருளிச் செய்த 'கொன்றை வேந்தன்' வாக்கியங்களில் **'ஆலயம் தொழுவது சால வும் நன்று'** என்ற வாக்கியத்தை நீக்கி விட்டுப் பிரசுரித்திருக்கிறார்களாம். ஏன்? புதுமாதிரியான ஆத்திசூடியையே அவர்கள் வெளியிடலாமே?

**அடம் செய விரும்பு**
**ஆடுவது சூது**
**இயம்புவது பொய்**
**ஈவது லஞ்சம்**
**உடைப்பது மண்டை**
**ஊக்கமது மதுவே**
**எடுத்தெறிந்து பேசு**
**ஏற்பது நன்கொடை**
**ஐஸ் வைக்கப் பழகு**
**ஒளிப்பது வருவாய்**
**ஓடுவது திரைப்படம்**
**ஔவையார் யார்?**



பத்திரிகை நிர்வாகிகள் போலீஸுக்குப் பல முறை ஃபோன் செய்தும் போலீஸிலிருந்து தக்க பாதுகாப்பைப் பெற முடியாமற் போனதும் பத்திரிகைச் சுதந்திரம் என்ற தொடருக்கு நேரான நல்ல அர்த்தம் எதுவும் கொள்வதற்குப் போதுமான முன் உதாரணங்களாக இல்லை. அலை ஓசை, குமுதம் இதழ்கள் தாக்கப்பட்ட மூன்று தினங்களுக்குப் பின் நகரின் பிற பத்திரிகை அலுவலகங்களுக்கும் சேர்த்துப் பாதுகாப்பு அளிப்பதாக நாடகம் போடுவது பத்திரிகைச் சுதந்திரத்தை இப்போது இங்குள்ள ஆட்சி எப்படி எப்படியெல்லாம் அவமதிக்க முடியும் என்பதையே காட்டுகின்றது. ஜனநாயகத்தில் பத்திரிகைகள் ஆளும் கட்சிக்குத் துதி பாட வேண்டும் என்று எதிர்பார்க்கும் மனப்பான்மை எவ்வளவு பிற்போக்கானது என்பதை ஆள்பவர்கள் இன்னும் புரிந்துகொண்டதாகவே தெரியவில்லையே? இந்த லட்சணத்தில் இவர்கள் கேட்கிற சுயாட்சி வேறு தரப்பட்டால்...?

### தரமும் தமிழக முதல்வரும்

**'வீ**ண் வதந்திகளுக்கும் ஹேஷ்யங்களுக்கும் இடம் தராமலிருக்க வேணும் தமிழக முதல்வர் பற்றிய மத்திய புலனாய்வுத் துறைக் குறிப்புக்களைக் காலந் தாழ்த்தாமல் டில்லியில் உள்ள மத்திய அரசு வெளியிடவேண்டும்' என்று ராஜாஜி அவர்கள் 18–6–72 கல்கியில் எழுதியிருந்த ஒரு குறிப்பைப் பற்றிப் பத்திரிகை நிருபர்கள் தமிழக முதல்வரிடம் திருச்சியில் கேட்டிருக்கிறார்கள். அதற்கு மறுமொழியாகத் தமிழக முதல்வர்,



''ராஜாஜி மிரட்டுவது போல் கூறியிருக்கிறார். எனக்கு இதுபற்றிப் பயம் இல்லை; கவலையுமில்லை. மடியில் கனமிருந்தால்தான் வழியில் பயம். ஆனால் ஒன்று... நேற்றுவரை ராஜாஜியை ஒரு தரமான அரசியல்வாதி என்று கருதிக் கொண்டிருந்தேன்'' என்று கூறியுள்ளார். இந்தப் பதில் முதல்வரின் 'தரம்' எது, எவ்வளவு என்பதை நன்றாக நிரூபித்துவிட்டது. தரம் தெரியாதவர்கள் தரத்தைப் பற்றிப் பேசினால் எப்படிப் பேசுவார்கள் என்பதையும் இது விளக்குகிறது. ராஜாஜி அவர்களின் தரம், சான்றாண்மை பற்றி முதல்வரை விடத் தமிழ் மக்கள் நன்கு அறிவார்கள்.

சில நாட்களுக்கு முன்னால் நான் எழுதியதை மீண்டும் வலியுறுத்துகிறேன். சமூக நலனைக் கருதி, தமிழ்நாடு விவகாரங்கள் பற்றிய புலனாய்வுத் துறைக் குறிப்புக்களை மத்திய அரசு பிரசுரத்துக்குத் தந்துவிட வேண்டும். இதை விடுத்து அதில் என்னென்ன விஷயங்கள் அடங்கியிருக்கின்றன என்பது பற்றி மக்கள் ஊகித்துக் கொண்டிருக்க அனுமதிப்பது நல்லதல்ல. **- ராஜாஜி**

# மலர்களிலே அவள் மல்லிகை!




மலர்களின் ராணி, மல்லிகை!
இளமைப் பூங்காவில் பூரிப்புடன்
பூத்துக் குலுங்கும் இந்த
இளமங்கை, அழகு
ராணியாகத் திகழ்கிறாள். அந்த
புத்தெழில் என்றுமே நிலைத்திட
அவள் ஜெய் அழகு சாதன சோப்
உபயோகிக்கிறாள். மல்லிகை மணம்
வீசும் ஜெய் சோப் மேனியை
மிருதுவாக்கி, பொன்னொளி
வீசச் செய்கிறது.

மல்லிகை
மணம் கமழும்

**ஜெய்**

அழகுசாதன
சோப்

டாடா தயாரிப்பு

OBM.7001 TM

# பஜாஜ் விசிறிகள் வைபோகம்




# பஜாஜ் பஹார்

சீலிங் மற்றும் மேசை மின் விசிறிகள்

## வசதியில் ஒரு புதிய அனுபவம்





















**பஜாஜ் எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட்**

45-47, வீர் நரிமான் ரோடு, பம்பாய்-1

இந்தியாவெங்கிலும் கிளைகள்

heros' BE-119 A TM



# சமயமும் சமூகமும்

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

சமய விதிகளில் சில லௌகிகத்தில் அசௌகரியம் உண்டாக்குகின்றன; தர்ம சாஸ்திர விதிகளில் சில சமூக வாழ்வில் கஷ்டம் உண்டாக்குகின்றன — என்பதைக் காரணம் காட்டிச் சீர்திருத்தக்காரர்கள் சாஸ்திரங்களை மாற்றுகிறார்கள்.

தர்ம சாஸ்திரங்களின் அடிப்படையையும் லட்சியத்தையுமே இந்தச் சீர்திருத்தக்காரர்கள் அறிந்திருக்கவில்லை. சமூகம் பலவிதமான மாறுபாடுகளுக்கு ஆளாகிக் கொண்டே இருப்பது. எனவே வெறுமே சமூகத்தைக் குறித்ததாக மட்டும் உள்ள விதிகளும் அதற்கேற்ப மாறலாம். ஆனால் நம் சாஸ்திரங்கள் வெறும் சமூக வாழ்வை மட்டும் கருத்தில் கொண்டவை அல்ல. அவை ஆத்மார்த்தமானவை. மனிதனானவன் சம்ஸாரத்திலிருந்து விடுபடுவதற்கு வழி சொல்வதே சாஸ்திரத்தின் லட்சியம். சமூகம்தான் மாறுமே ஒழிய ஆத்மார்த்தமான சத்தியங்கள் எந்நாளும் மாறுவதில்லை. மாறுகிற சமூகத்தை அந்த மாறாத சத்தியத்தில் நிலைப்படுத்துவதற்காகச் சாஸ்திரங்கள் விதித்த நியதிகளும் மாறாதவையே.

இதேபோலத்தான் லௌகிகமாக மட்டும் உள்ள விஷயங்களை மாற்றிக் கொள்ளலாம். ஆனால் ஆத்ம க்ஷேமத்தையே லட்சியமாக வைத்து, அதற்கு அநுசரணையாக லௌகிக வாழ்வுக்கு விதிகள் செய்து தருகிறபோது, இவ்விதிகளை மாற்ற முடியாது. தர்ம சாஸ்திர விதிகள் லௌகிகத்தில் அசௌகரியமாயிருக்கிறது என்று குறைப்படுவதே பொருந்தாது. ஏனென்றால் தர்ம சாஸ்திரம் இகலோக சௌக்கியத்தை முக்கியமாகவே கருதவில்லை. இகலோகத்தில் பலவித அசௌகரியங்களை அநுபவித்தாவது பரலோக சுகம் பெறுவதற்கே அது உபாயம் சொல்கிறது. ஆனபடியால் அதை உலக ரீதியில் நமது சௌகரியப்படி மாற்ற வேண்டும் என்பது நியாயமில்லை.

சீர்திருத்தக்காரர்களைக் குற்றம் சொல்லிப் பயனில்லை. அவர்கள் இப்படிக் கருதுவதற்குக் காரணம் நம்முடைய கல்வி முறையே ஆகும். மற்ற தேசங்களில் அவரவர் மதத்துக்கும் படிப்பு முறைக்கும் இடையே முரண் இல்லை. துரதிருஷ்டவசமாக நம் தேசத்திலோ வெள்ளைக்காரர் காலத்தில் ஏற்பட்ட பள்ளிக்கூடங்கள் நம் மதத் தொடர்பே இல்லாமல் உருவாயின. ஜீவனத்துக்காக எல்லாரும் இந்தப் படிப்பிலேயே போய் விழும்படி ஆயிற்று. குழந்தைப் பருவத்திலேயே இவ்வாறு சொந்த சாஸ்திரங்களில் தொடர்பில்லாமல் அந்நிய முறையில் ஊறியதால், நம் புராதன சாஸ்திரங்களில் பற்றோ நம்பிக்கையோ ஏற்படவே வழி இல்லாமல் ஆகிவிட்டது. சாஸ்திரங்களின் உபதேசம் இன்னது என்றே தெரியாததால், அதன் விதிகளையும் மனம் போனபடி மாற்றலாம் என்று எண்ண ஆரம்பித்துவிட்டார்கள்.

புராணங்கள் புளுகு மூட்டை; சாஸ்திரங்கள் குருட்டு நம்பிக்கையை வளர்ப்பவை என்பதைத்தான் ஆரம்பத்திலிருந்தே நம் குழந்தைகள் கேட்டு வருகிறார்கள். இவர்களுக்கு எப்படி நம் மத அநுஷ்டானங்களிலும் ஆசாரங்களிலும் பிடிப்பு ஏற்பட முடியும்?

சிறு பிராயத்திலிருந்து ஆஸ்திக புத்தியை வளர்க்க வேண்டும்; நமது மத அநுஷ்டானங்களை விடாமல் பற்றி ஒழுகி உத்தமமாக வாழ்கிற சிஷ்டர்களின் சங்கத்தில் குழந்தைகளைப் பழக்க வேண்டும்; இந்திரிய அதீதமான அநுபவம் பெற்ற ரிஷிகள் பிரத்தியட்ச அனு-பவத்தின் மீது தந்த கிரந்தங்களே ஆத்ம க்ஷேமத்துக்கு வழி காட்டுபவை என்ற நம்பிக்கையை உண்டாக்க வேண்டும். இகலோக சௌக்கியம், சமூக வாழ்வு இவற்றையும் ஆத்ம க்ஷேமத்துக்கு உகந்த முறையில் ஒழுங்குபடுத்தித் தரவே ரிஷிகள் சாஸ்திரங்களைத் தந்தார்கள் என்ற விசுவாசத்தை ஏற்படுத்த வேண்டும். அப்போதுதான் லௌகிக சௌக்கியம், சமூக சௌக்கியம் எல்லாவற்றுக்கும் மேலாக சமய விதிகளைக் கருதி அநுசரிக்கிற அறிவு நாட்டில் வளரும்.

# அழகு சொட்டும் தொட்டுணர்வு

## ஹேஸ்லீன் ஸ்னோ



நலசிறந்த அழகு
சாதன ஸ்னோவான
ஹேஸலீன், உங்கள்
மாந்தளிர் மேனிக்கு
மென்மையப் பராமரிப்பு
வழங்குகிறது.
லேசாகவும் மிருதுவா-
கவும் விளங்கும்
ஹேஸலீன் ஸ்னோ,
சீராகப் பரவி, உங்கள்
மேனியைப் பாதுகாத்து,
சருமத்தை நன்கு
பராமரிக்கிறது.
உங்கள் மேனி குற்றங்
குறையின்றி முற்றும்
இளமையுடன் வனப்-
பொங்கி விளங்க,
நித்தமும் உபயோகி
யுங்கள் இதை.
இளமையான இயற்கை
எழிலின் இரகசியம்,
ஹேஸலீன் ஸ்னோ.




SHB-8295 TM

# அலை ஓசை

அமரர் கல்கி

## 11. தாஜ்மகால்

புது மணம் புரிந்த மங்கை தன்னுடைய காதலன் அருகில் நெருங்கி வரும்போது ஆசையும் நாணமும் கலந்த தோற்றத்துடன் நிற்பது போலத் தங்க நிலாவில் தாஜ்மகால் என்னும் மோகினி நின்றாள். தும்பைப் பூவை யொத்த வெண்மையும் மென்மையும் பொருந்திய டாக்கா மஸ்லினைக் கொண்டு மேனியை மட்டுமின்றி முகத்தையும் முக்கால் பங்கு மறைத்துக் கொண்டு அந்தப் புவன மோகினி சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். அவளை நாலு புறமும் காவல்கள் புரியும் தோழிப் பெண்களைப் போல் நெடிதுயர்ந்த ஸ்தம்பக் கோபுரங்கள் நாலு மூலையிலும் நிமிர்ந்து நின்றன.

உலகம் தோன்றிய நாள் தொட்டுக் காதலர்களுக்கு வேதனை தருவதையே தொழிலாகக் கொண்ட பூரண சந்திரன் தனது கர்ம பலனை இந்தத் தாஜ்மகால் மோகினியிடம் அனுபவித்தான். தன்னுடைய ஆயிரமாயிரம் தங்கக் கரங்களினால் அந்த இணையில்லா அழகியைத் தழுவ ஆசை கொண்டு எவ்வளவோ முயன்றான். எனினும் தூய்மையே உருவெடுத்த அந்த நங்கையின் மேனியை அவனுடைய கரங்கள் தொட முடியாமல் அப்பால் நழுவி விழுந்தன. ஒருவேளை நாணங் காரணமாகத் தன்னைப் புறக்கணிக்கிறாளோ என்று எண்ணி இருள் நிழலைத் தன் உதவிக்கு அழைத்தான். ஆனால் நிழல் அந்தக் கற்பரசியின் மேனிக்கு ஒரு கவசமாகிக் காமுகனுடைய கரங்களை அப்பால் நிற்கச் செய்தது.

சந்திரனுக்குக் காதல் வேதனை பொறுக்க முடியாமல் போயிற்று. ''தாஜ்மகால் மோகினியினால் புறக்கணிக்கப்பட்ட பிறகு இந்த ஜன்மம் என்னத்துக்கு?'' என்று நிராசையடைந்தான். அவள் கண்ணுக்கெதிரே தன் உயிரை விட்டு விட எண்ணி அங்கிருந்த அழகிய நீரோடையில் தலை குப்புற விழுந்தான். அப்போதுதான் அந்த வெண் மலர் மேனியாளுக்கு மனத்தில் இரக்கம் உண்டாயிற்று. சந்திரனைக் கரையேற்றத் தானும் ஓடையில் குதித்தாள்! பளிங்குக் கல் ஓடையில் ஸ்படிகம் போலத் தெளிந்திருந்த நீரில் தங்கச் சந்திரனும் தாஜ்மகால் மோகினியும் ஒருவரை யொருவர் கட்டித் தழுவிக் கொள்வதாகக் காதலர் உலகத்தில் மெய் மறந்து சஞ்சரித்துக் கொண்டிருந்த சீதாவின் கற்பனைக் கண்களுக்குத் தோன்றியது. ஆஹா! எத்தனை காலமாக இந்தத் தாஜ்மகாலைப் பார்ப்பதற்கு அவள் ஆவல் கொண்டிருந்தாள்! எத்தனை முறை மானசிக யாத்திரை செய்து இங்கே அவள் வந்திருக்கிறாள்! — அந்தக் கனவெல்லாம் இன்றைய தினம் உண்மையாகி விட்டது. சீதாவின் வாழ்க்கையில் இது ஒரு மகத்தான நன்னாள் என்பதில் சந்தேகம் என்ன?

தாஜ்மகாலின் முன் வாசலில் பிரவேசித்த பிறகு பிரதான கட்டிடம் வரையில் உள்ள நிலா முற்றம் ஏறக்குறைய இரண்டாயிரம் அடி நீளமும் ஆயிரம் அடி அகலமும் உள்ளது. இந்த நிலா முற்றத்தில் குறுக்கும் நெடுக்குமாக நீலோத்பலம் மலர்ந்த நீரோடைகள் பல இருக்கின்றன. வெள்ளைப் பளிங்குக் கல் ஓடைகளில் நீலவர்ண ஜலமும் நீலோத்பலமும் நீல வானத்தின் பிரதிபலிப்பும் நட்சத்திரங்களின் ஜொலிப்பும் வர்ணிக்க முடியாத சௌந்தரியக் காட்சியாகத் திகழ்கின்றன.

கட்டிடத்தை நெருங்கும்போது நீர் ஓடைகளில் தாஜ்மகாலின் பிரதிபிம்பத்தையும் காணலாம். பௌர்ணமியன்று பூரணச் சந்திரனுடைய பிரதிபிம்பமும் ஓடை நீரில் ஜ்வலித்துக் கொண்டிருக்கும் என்று சொல்லவா வேண்டும்?

தங்க நிலாவின் ஒளியில், வெள்ளிப் பளிங்குக் கல் தரையில், நீல ஓடைக் கரையில், சீதா, ராகவன், சூரியா, தாரிணி, நிருபமா, அவளுடைய கணவர் வேணிப் பிரஸாத் ஆகியவர்கள் உட்கார்ந்திருந்தார்கள்.

மாலை நேரமெல்லாம் அவர்கள் தாஜ்மகாலைச் சுற்றிச் சுற்றிப் பார்த்தார்கள். உள்ளே சென்று ஷாஜஹான், மும்தாஜ் சமாதிகளைப் பார்த்தார்கள். சமாதிகளைச் சுற்றிலும் சலவைக் கல்லில் அமைந்திருந்த அதி அற்புதமான சித்திர விசித்திர வேலைகளைப் பார்த்தார்கள். தூர தூர தேசங்களிலிருந்து தருவித்துப் பதித்திருந்த இரத்தினக் கற்களினாலான புஷ்ப ஹாரங்களைப் பார்த்தார்கள்.



நாலு மூலையிலும் நூற்றறுபது அடி உயரம் நிமிர்ந்து நின்ற காவல் கோபுரங்களிலே அவர்கள் போட்டி போட்டுக் கொண்டு ஏறி உச்சியிலிருந்து நாலாபுறமும் பார்த்து மகிழ்ந்தார்கள். யமுனை நதியில் இறங்கிக் களித்தார்கள். அங்கு மிங்கும் ஓடியாடினார்கள். ஓடியவர்களைத் துரத்திப் பிடித்தார்கள். கலகலவென்று சிரித்தார்கள். விளையாட்டாக ஒருவரை யொருவர் அடித்தார்கள்.

இப்படி யெல்லாம் குதூகலமாக மாலை நேரத்தைக் கழித்த பிறகு எல்லாரும் ஓரளவு உடல் சோர்ந்து, ஓடைக் கரையில் உட்கார்ந்தார்கள். இரவு சுமார் ஒன்பது மணி இருக்கும். புற உலகம் எங்கும் அமைதி நிலவியது. ஆனால் நம்முடைய நண்பர்கள் எல்லாருடைய உள்ளத்திலும் அமைதி நிலவியது என்று சொல்ல முடியாது. சீதா, ராகவன், தாரிணி, சூரியா ஆகிய ஒவ்வொருவருடைய உள்ளமும் வெவ்வேறு காரணத்தினால் கொந்தளித்துக் கொண்டிருந்தது.

''மனித ஜன்மம் எடுத்துத் தாஜ்மகாலைப் பார்க்காமல் இருப்பதில் என்ன பயன்? அப்படிப் பட்ட ஜன்மமும் ஒரு ஜன்மமா?'' என்று சீதா பேச்சைத் தொடங்கினாள்.

''அதுவும் பகலில் பார்த்தால் மட்டும் போதாது. இந்த மாதிரி பௌர்ணமி நிலவிலே பார்க்க வேண்டும்'' என்றான் ராகவன்.

''பார்த்துவிட்டு உடனே உயிரை விட்டுவிட வேண்டும். அப்புறம் உயிர் என்னத்துக்கு?'' என்றான் சூரியா.

அவன் பரிகாசமாகச் சொல்கிறான் என்பதைத் தெரிந்து கொண்ட சீதா, ''ஆமாம், அம்மாஞ்சி! தாஜ்மகாலைப் பார்த்த பிறகு உயிரோடிருப்பது அவசியமில்லைதான்!'' என்றாள்.

''தீப ஒளியைப் பார்க்கிற விட்டில் பூச்சி அப்படித்தான் எண்ணிக் கொள்கிறது!'' என்றான் சூரியா.

''என்னைப் பொறுத்தவரையில் இந்த மாதிரி ஒரு கட்டிடம் என்னைப் புதைக்கு மிடத்துக்கு மேலே கட்டுவதா யிருந்தால் நான் இங்கேயே இந்த நிமிஷமே உயிரை விடத் தயார்!'' என்றாள் நிருபமா.

''அப்படி ஏதாவது செய்து வைக்காதே! இப்போதெல்லாம் உயிரோடிருப்பவர்கள் வசிப்பதற்கு வீடு கட்டுவதே கஷ்டமாயிருக்கிறது. செத்துப் போனவர்களுக்கு எப்படிக் கட்டிடம் கட்ட முடியும்? நிச்சயமாக என்னால் முடியாது!'' என்றார் நிருபமாவின் கணவர் வேணி பிரஸாத்.

''மிஸ்டர் பிரஸாத்! தங்களுடைய மனைவிதான் முதன் முதலில் இம்மாதிரி சொன்னார் என்பதில்லை. இதற்கு முன் வந்து பார்த்த எத்தனையோ ஸ்திரீகள்—வெள்ளைக்காரத் துரைசானிமார்கள் உட்பட — இம்மாதிரியே சொல்லியிருக்கிறார்கள். ஆனால் சிறிதும் யோசனையின்றித்தான் சொல்லியிருக்கிறார்கள். செத்துப் போன பிறகு உடம்பைச் சுடுகாட்டில் வைத்து எரித்தால் என்ன? அல்லது அதைப் புதைத்துத் தாஜ்மகால் போன்ற ஒரு கட்டி

டத்தை அதன் மேல் கட்டினால் என்ன? இறந்தவர்களுக்கு எப்படிச் செய்தாலும் ஒன்றுதான்!'' என்று சூரியா சொன்னான்.

''சரியான பேச்சு! என்னுடைய கட்சியும் அதுதான். செத்துப்போன ஷாஜஹானுடைய ராணிக்கு இந்தத் தாஜ்மகால் கட்டிடத்தினால் யாதொரு பயனும் இல்லை. ஆனால் நம்மைப் போல் உயிரோடிருப்பவர்கள் எத்தனையோ பேர் இந்த அற்புதக் காட்சியைப் பார்த்து அநுபவிக்க முடிகிறது. உமர்காயத்தின் கவிதை இந்த மாதிரி இடத்துக்குத்தான் பொருந்தும். ''**தங்குவதற்குத் தாஜ்மகால்; ஒரு கூஜா திராட்சை ரஸம், ஒரு கவிதை புத்தகம்; என் அருகிலே நீ: இதைக் காட்டிலும் வேறு சொர்க்கமும் உண்டோ?**'' என்று கூறிச் சௌந்தரராகவன் தாரிணியை உற்று நோக்கினான்.

''இத்தகைய மனோரதம் உங்களுக்கும் வேணி பிரஸாதுக்கும் நிறைவேற இடம் உண்டு. ஆனால் தாரிணியையும் மிஸ்டர் சூரியாவையும் போன்றவர்கள் என்ன செய்வது?'' என்று நிருபமா சொன்னாள்.

''அவரவர்களுக்கும் ஒரு நாள் கல்யாணம் நடந்து விடுகிறது. சூரியா விஷயத்தில் கல்யாணத்தைப் பற்றிக் கவலையில்லை. அவன் சம்மதிக்க வேண்டியதுதான்! மணப் பெண் தயாராகக் காத்துக்கொண்டிருக்கிறாள்!'' என்றாள் சீதா.

''அத்தங்கா! உனக்கு எப்போதும் காதலும் கல்யாணமும்



தான் நினைவு. காதலைத் தவிர உலகத்தில் வேறொன்றும் கிடையாதா?'' என்றான் சூரியா.

''சந்தேகம் என்ன? காதலைக் காட்டிலும் உலகத்தில் முக்கியமானது ஒன்றுமில்லைதான். கவிதைகள், காவியங்கள் எல்லாம் காதலை அடிப்படையாகக் கொண்டுதானே புனைகிறார்கள்? காதல் இல்லாவிட்டால் வால்மீகியின் ராமாயணம் ஏது? காளிதாஸனின் சாகுந்தலம் ஏது? ஷேக்ஸ்பியரின் நாடகம் ஏது? மற்றும் இந்த நாளில் நவீன ஆசிரியர்கள் நவநவமாக எழுதி வெளியிடும் அற்புதமான நாவல்களைத்தான் அவர்கள் எப்படி எழுத முடியும்?'' என்றான் ராகவன்.

''ஆகா! உங்கள் நாவல்களைக் கொண்டு போய்க் குப்பையிலே போடுங்கள். வேறு ஒன்றும் விஷயம் இல்லாதவர்கள் காதற்கதைகள் எழுதுகிறார்கள், வேலையற்ற வீணர்கள் காதற் கவிதைகள் புனைகிறார்கள்!'' என்று சூரியா சொன்னான். நிமிஷத்துக்கு நிமிஷம் அவனுடைய உள்ளத்தில் ஆவேசமும் அவன் குரலில் ஆத்திரமும் பெருகிக் கொண்டிருந்தன.

''பின்னே எல்லாரும் காரல் மார்க்ஸைப் போலவே எழுத வேண்டும் என்கிறாயாக்கும்!'' என்று சௌந்தர ராகவன் கேலியாகக் கேட்டான்.

''எல்லாரும் காரல் மார்க்ஸைப் போல் எழுத வேண்டாம். டால்ஸ்டாயைப் போல் எழுதட்டுமே? காந்தி மகானைப் போல் எழுதட்டுமே? ஜவாஹர்லால் நேருவைப் போல் எழுதட்டுமே? பெர்னார்ட் ஷாவைப் போல் எழுதட்டுமே?''

''அம்மாஞ்சி! பாரதியாரைப் போல் எழுதலாமா கூடாதா? பாரதியார் காதலைப் பற்றி என்ன சொல்லி யிருக்கிறார்? நினைவிருக்கிறதா?'' என்றாள் சீதா.

''பாரதியார் என்ன சொல்லி யிருந்தால் இப்போது என்ன? அவர் சொன்னதெல்லாம் சரி என்று நான் ஒப்புக்கொள்ள வில்லையே? பாரதியாருக்கு அறிவு தெளிந்திருந்தபோது தேசத்தின் சுதந்திரத்தைப் பாடினார். கொஞ்சம் மயக்கமா யிருந்தபோது காதலைப் பற்றிப் பாடினார்'' என்றான் சூரியா.

''இவர் பேசுவதைப் பார்த்தால் ஏதோ காதலில் ஏமாற்றமடைந்தவர் போலத் தோன்றுகிறது'' என்று தாரிணி கூறிப் புன்னகை புரிந்தபோது அவளுடைய முல்லைப் பற்கள் நிலா வெளிச்சத்தில் முத்தைப் போல் பிரகாசித்தன. அவளுடைய முக பாவத்தில் அநுதாபம் காணப்பட்டது.

''அப்படி யெல்லாம் ஒன்றுமில்லை'' என்று சொல்லிச் சூரியா வெட்கத்தினால் தலையைக் குனிந்து கொண்டான்.

''சூரியா இப்படித்தான் ஏதாவது ஏட்டிக்குப் போட்டியாகச் சொல்வான். அவனுடைய போக்கே அலாதி. பாரதியார் காதலைப் பற்றி என்ன சொல்லியிருக்கிறார்? அதைச் சொல்லு! நாங்கள் கேட்கிறோம்'' என்றான் ராகவன்.

**''அன்பு வாழ்கென்று**
**அமைதியில் ஆடுவோம்!**
**ஆசைக் காதலைக்**
**கைகொட்டி வாழ்த்துவோம்!''**

என்று மெல்லிய பொய்க் குரலில் பாடிக் காட்டினாள் சீதா.

''அந்தப் பாட்டை முழுவதும் நன்றாகப் பாடுங்கள்! கேட்க விருப்பமாயிருக்கிறது.'' என்றாள் தாரிணி.

''ஆம்; பாடுவதற்கேற்ற சமயம் இது. இவ்வளவு நேரம் வீண் பேச்சில் போய் விட்டது. சங்கோசப்படாமல் குரலை நன்றாக விட்டுப் பாடுங்கள்!'' என்றாள் நிருபமா.

சீதா, ராகவனுடைய முகத்தைப் பார்த்தாள். ''அபஸ்வர மில்லாமல் பாடுவதா யிருந்தால் பாடு!'' என்றான் ராகவன்.

ராகவனுடைய பதில் சீதாவுக்குக் கோபத்தை ஊட்டியது. ஆயினும் சமாளித்துக் கொண்டு, ''அபஸ்வரமோ, ஸுஸ்வரமோ, எனக்குத் தெரிந்தபடி தானே பாட முடியும்?'' என்றாள்.

''எங்களுக்கு ஸுஸ்வரமும் தெரியாது; அபஸ்வரமும் தெரியாது. எல்லா ஸ்வரமும் எங்களுக்கு ஒன்றுதான். தைரியமாகப் பாடுங்கள்!'' என்றாள் நிருபமா. பிறகு ராகவனைப் பார்த்து, உங்களுக்குப் பிடிக்காவிட்டால் காதை அடைத்துக் கொள்ளுங்கள்!'' என்றாள்.

**''பெண்மை வாழ்கென்று**
**கூத்திடுவோமடா!**
**பெண்மை வெல்கென்று**
**கூத்திடுவோமடா!''**

என்ற பாட்டைச் சீதா பாடினாள். பாடும்போது எல்லாரும் சீதாவின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சௌந்தர ராகவன் மட்டும் தாரிணியின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

பாட்டு முடிந்ததும், தாரிணியும் நிருபமாவும் தங்கள் மகிழ்ச்சியைத் தெரி




# மாசில்லாத பளபளப்பை வீசிட வைப்பது விம்.




பிசுக்கு இல்லை!
கசடு இல்லை!
கீறல் இல்லை!

லின்டாஸ்.V-39-140 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

டாடா டெக்ஸ்டைல்ஸ் வெளியீடு!

# பேட்டிஸ்ட்

இலட்சோப லட்சம் ரசிக
பெருமக்களின் இதயங்களை
கொள்ளை கொள்ளும்
வரலாறு காணாத படைப்பு.
'டெரீன்' / காட்டன் ஷர்ட்டிங்.

சுருக்கிடும் சுருக்கங்களை வென்று வீழ்த்தி,
இஸ்திரி பெட்டிகளை எட்டி உதைத்து
எத்தனை பழசானாலும் என்றும் வெண்மை
பளிச்சிட, ஏறுநடை போடும் எழுச்சிமிகுத்
தயாரிப்பு, இப்படியொன்று இதுவரை
துணிவானில் கடாவிட்டதில்லை என
பார்த்தவர் பாராட்டுகிறார்கள்! கோடல
ஷர்ட்டுகள் பேட்டிஸ்ட்டின் கைவண்ணமே

தயாரிப்பாளர்கள்:

டாடா டெக்ஸ்டைல்ஸ்



ULKA.TT 134 TM

கண்டு களியுங்கள் - பேட்டிஸ்ட் இப்போது உங்கள் அருகமைந்த கடைகளில் கிடைக்கின்றன

வித்துக் கொண்டார்கள். நிருபமாவுக்கும் அவளுடைய கணவனுக்கும் தாரிணி பாட்டின் கருத்தை விளக்கினாள்.

ராகவன், "இது என்ன பாட்டு, டா, டு, என்று? எனக்கு ஒன்றும் அவ்வளவாகப் பிடிக்கவில்லை" என்றான்.

"இந்தப் பாட்டில் நல்ல கருத்துக்கள் பல இருக்கின்றன. ஆனால் காதலைப் பற்றி இவ்வளவு பிரமாதப்படுத்த வேண்டாம்.

**'காற்றி லேறி அவ்விண்ணையும்**
**சாடுவோம்**
**காதற் பெண்கள் கடைக்கண்**
**பணியிலே!'**

என்பதெல்லாம் மிகைப்படுத்துவதில் சேர்ந்தது. காதற் பெண்கள் கடைக்கண்ணால் பணித்தால் என்ன வேணுமானாலும் செய்து விடலாமாக்கும்! சுத்த அபத்தம்! இந்த மாதிரிக் காரியம் செய்தவர்களால்தான் இந்தியா தேசம் அடிமைப்பட்டு, பாழாய்ப் போயிற்று - பிருதிவி ராஜனைப் போல — அத்தங்கா! பாரதியாரின் தேசிய கீதம் ஒன்று பாடு!" என்றான் சூரியா.

"எனக்குத் தேசிய கீதம் ஒன்றும் தெரியாது. பாடினாலும் அபஸ்வரமாயிருக்கும்; டா, டு, என்று கர்ண கடூரமாயிருக்கும்!" என்றாள் சீதா.

"தாரிணி! உனக்கு ஹிந்துஸ்தானியில் ஒரு தேசிய கீதம் தெரியுமே?— அதைப் பாடு!" என்றான் ராகவன்.

"ஆமாம், தாரிணி! 'ஸாரே ஜஹான் ஸே அச்சா' என்ற கீதம் உனக்குத் தெரியுமே? அதைப் பாடு. கராச்சியிலிருந்து பம்பாய்க்குக் கப்பலில் போனபோது கடைசியாக நீ பாடிக் கேட்டது; அப்புறம் கேட்கவே இல்லை" என்றாள் நிருபமா.

தாரிணி பாடினாள். இரவு நேரத்தில் சப்தம் செய்யும் பட்சிகளும் வண்டுகளும் காற்றும்கூட அடங்கி நின்றன. பூரண சந்திரன் தாஜ்மகால் மோகினியை ஒரு கணம் மறந்து தாரிணியின் கீதத்தில் கவனம் செலுத்தினான். நட்சத்திரங்கள் கண் கொட்டுவதைக்கூட நிறுத்தி ஆர்வத்தோடு கேட்டன. நிலா வெளிச்சத்தில் புகைப்படம் எடுக்க முயன்று கொண்டிருந்த ஒரு வெள்ளைக்காரரும் அவருடைய துரைசானியும் கூடத் தங்கள் காமிராவை மூடிவிட்டுக் காது கொடுத்துக் கேட்டனர்.

பாடி முடித்ததும் நிருபமாவும் அவளுடைய கணவரும், "அச்சா! பஹுத் அச்சா!" என்றார்கள்.



"நம் ஆபீசில் கம்ப்யூட்டர் புகுத்துவதை ஆட்சேபிக்கும்வகையில் ஊழியர்களின் தொடர் உண்ணாவிரதப் போராட்டத்தில் யார் யார் எப்பொப்போ உண்ணாவிரதம் இருக்க வேண்டும் என்பதைக் கம்ப்யூட்டரே தேர்ந்தெடுக்க வேண்டுமென முடிவு செய்திருக்கிறோம்!"

"பலே பேஷ்!" என்றான் சூரியா.

"பாடினால் இப்படிப் பாட வேண்டும். இல்லாவிட்டால் சும்மா இருக்க வேண்டும்" என்றான் ராகவன்.

சீதாவின் உள்ளம் புண்பட்டது என்பதைச் சூரியா கவனித்தான். அவளைப் பார்த்து, "அத்தங்கா! நீகூட இந்தப் பாட்டைக் கற்றுக்கொள்ளலாம். இதன் அர்த்தம் என்ன தெரியுமா? 'உலகில் உள்ள எல்லாத் தேசங்களிலும் சிறந்தது நம்முடைய ஹிந்துஸ்தானம்' என்பது முதல் வரியின் கருத்து" என்றான்.

"அதற்குக் கூடச் சந்தேகமா? உலகத்திலெல்லாம் மிகச் சிறந்த தேசம் நம் இந்தியா தேசம்தான். அதை நிரூபிக்க இந்தத் தாஜ்மகால் ஒன்று போதுமே?" என்றாள் சீதா.

"நீ சொல்வது தவறு. இந்தியாவின் மகிமை தாஜ்மகாலினால் ஏற்படவில்லை. இமய மலையினாலும் கங்கை நதியினாலும் புத்தராலும், அசோகராலும், சிவாஜியாலும், ஜான்ஸி ராணியாலும் இந்தியாவுக்கு மகிமை ஏற்பட்டது" என்றான் சூரியா.

"இமய மலையையும் கங்கை நதியையும் போல் வேறு தேசங்களில் மலையும் நதியும் இருக்கின்றன. ஆனால் தாஜ்மகாலைப் போன்ற ஒரு கட்டிடம் கிடையாது. ஆகையால் இந்தியா தாஜ்மகாலினால்தான் பெருமை யடைந்திருக்கிறது" என்று சொன்னான் ராகவன்.

"இந்தப் பெருமை இந்தியாவுக்கு வேண்டாம் என்று நான் நினைக்கிறேன்" என்றான் சூரியா.

''உலகத்தின் ஒன்பதாவது அதிசயம் உனக்கு மட்டும் அதிசயமா யில்லையாக் கும்!'' என்றான் ராகவன்.

''மிஸ்டர் சூரியாவுக்கு அதிசயமா யில்லா விட்டால் உலகம் அஸ்தமித்து விடாது. இந்தத் தாஜ்மகால் கட்டி டத்தினால் இந்தியாவின் மகிமை விளங்கு கிறது; சலனமில்லாத காதலின் பெருமையும் இதன் மூலம் வெளியா கிறது!'' என்றார் பிரஸாத்.

''ஆ! நீங்கள்கூடக் காதலைப் புகழ ஆரம்பித்து விட்டீர்களா?'' என்று சூரியா அருவருப்பு நிறைந்த குரலில் கேட்டான்.

''நீங்கள் ஏன் காதல் என்றால் கரிக் கிறீர்கள்? இந்தத் தெய்விக அழகு வாய்ந்த தாஜ்மகால் ஷாஜஹானுடைய காதலிலிருந்து தானே உற்பவித்தது?'' என்று நிருபமா கூறினாள்.

''அம்மணி! தயவுசெய்து கேளுங்கள். ஷாஜஹானுடைய காதலிலிருந்து இந்தத் தாஜ்மகால் கட்டிடம் பிறக்க வில்லை. பாதுஷா ஷாஜஹானுடைய கொடுங்கோன்மையிலிருந்து பிறந்தது. அந்தக் கொடுங்கோன்மை அவனுடைய மகன் ஔரங்கஜீப்புக்கே பொறுக்க வில்லை. அதற்காக அவன் தன் சொந்தத் தகப்பனைச் சிறையில் அடைத்து வைத்தான்.''

''ஆ! ஔரங்கஜீப் கலை உணர்ச்சி என்பது அறவே இல்லாதவன். அவன் கொடுங்கோலன் என்பது சரித்திரப் பிர சித்தமானது. ஷாஜஹான் எப்படிக் கொடுங்கோலனாவான்? அவன் ரொம்ப நல்லவன் என்று சரித்திரம் சொல் கிறதே!''

''ஆமாம்; ரொம்ப ரொம்ப நல்ல வன். ஆனால் அந்த ஒரு நல்லவனுடைய தற்பெருமைக்காக எத்தனை ஜனங்கள் கஷ்டப்பட வேண்டி யிருந்தது தெரி யுமா? இந்தத் தாஜ்மகாலைக் கட்டி முடிக்க இருபது வருஷம் ஆயிற்று என்று உங்களுக்குத் தெரியுமா? இருபதாயிரம் தொழிலாளிகள் நெற்றி வியர்வை நிலத் தில் விழ இரவு பகல் பாடு பட்டார்கள் என்று தெரியுமா? மக்களைக் கசக்கிப் பிழிந்து வசூலித்த வரிப் பணத்தில் கோடானுகோடி ரூபாய் செலவழிந் தது என்பது தெரியுமா? ஒரு தனி மனி தனுடைய தற்பெருமைக்காக இருக்கட் டும்; அல்லது அவனுடைய அதிசயமான காதலுக்காகவே இருக்கட்டும்; இருபதி னாயிரம் பேர் இருபது வருஷம் உழைத்து உழைத்து உயிர் விட வேண்டுமா? இதை ஒருநாளும் நான் ஒப்புக் கொள்ள முடி யாது. எனக்கு மட்டும் அதிகாரம் இருந் தால் என்ன செய்வேன் தெரியுமா?'' என்று ஆங்காரத்துடன் கூறிச் சூரியா மூச்சு விடுவதற்காக நிறுத்தினான்.

''உமக்கு அதிகாரம் இருந்தால் என்ன செய்வீர்?'' என்று தாரிணி புன் னகை புரிந்த வண்ணம் கேட்டாள்.

அன்று மாலை தாஜ்மகால் வாசலில் இருந்த விளையாட்டுச் சாமான் கடை யில் சீதா ஒரு பளிங்குக் கல் 'மாடல்' தாஜ்மகாலை வாங்கி யிருந்தாள். அது சூரியாவின் பக்கத்தில் இருந்தது. சூரியா அதைக் கையில் எடுத்துக் கொண்டான். ''ஆயிரம் பதினாயிரம் மக்களைக் கொடுமைப்படுத்தி ஒரு மூட அரசன் தன்னுடைய தற்பெருமைக் காகக் கட்டிய இந்தத் தாஜ்மகாலை, எனக்கு அதிகாரம் இருந்தால் இந்த நிமிஷமே இடித்துத் தள்ளிச் சுக்கு நூறாக்குவேன்!'' என்று இரைந்து கத் திய வண்ணம் கையிலிருந்த தாஜ்மகால் பொம்மையை வீசி எறிந்தான். எறிந்த தாஜ்மகால் பொம்மை தாரிணியை நோக்கிச் சென்றது. அவளுடைய தலையிலோ முகத்திலோ அது விழப் போகிறது என்ற பயத்தினால், பார்த் திருந்தவர்கள் எல்லோரும் ''ஆஹா!'' என்றார்கள். தாரிணியும் திடுக்கிட்டுச் சிறிது தன் தலையைப் பின்வாங்கிக் கொண்டாள். நல்ல வேளையாக, எறி யப்பட்ட தாஜ்மகால் தாரிணியின் மேல் விழாமல் பக்கத்தில் விழுந்தது. விழுந்த வேகத்தில் சுக்கு நூறாயிற்று. உடைந்த பகுதி ஒன்று எகிறிக் கிளம்பிச் சென்று தாரிணியின் நெற்றியில் தாக் கியது. முன் கூந்தலுக்குக் கீழே காயம் பட்டு இரத்தம் கசியத் தொடங்கியது. தாரிணியின் தந்த நிற நெற்றியிலிருந்து கசிந்த ரத்தத் துளியை வெண்ணிலவின் கிரணம் தழுவி அதை ஜோதி மயமான நாகரத்தினம் போலத் திகழச் செய்தது.

தாஜ்மகால் தாரிணியின் மேல் விழா மல் கீழே விழுந்ததினால் பயம் நீங்கப் பெற்றவர்களை இந்த விபரீதம் மீண்டும் திடுக்கிடச்செய்தது. சூரியாவைத் தவிர மற்றவர்கள், ''ஆஹா!'' என்று சத்த மிட்டுக் கொண்டு தாரிணியைச் சூழ்ந்து கொண்டார்கள். முதலில் அவளை அணு கிச் சென்று நெற்றியில் கையை வைத்து இரத்தத்தை நிறுத்த முயன்றவன் ராக வன்தான். நிருபமா பலாத்காரமாக அவனுடைய கையை அப்புறப்படுத்தி விட்டுத் தன்னுடைய கைக்குட்டையி னால் காயம்பட்ட இடத்தில் கட்டினாள்.

மற்றவர்களைப் போலவே கவலை யுடன் தாரிணியின் அருகில் சென்ற சீதா, ராகவனுடைய செய்கையைப் பார்த்து நெஞ்சிலே அம்பு பாய்ந்தவ ளைப் போன்ற வேதனை அடைந்தாள்.



# தலைவலியா?

# அனாஸின்

## விரைவிலே குணம் பெற மேலானது. ஏனெனில் அது சக்தி வாய்ந்தது; நம்பகமானது.



"அனாஸின் தலைவலியை விரைவிலே அகற்றுகிறது" என்று அடித்துக் கூறுகிறார், பம்பாய் ஆபீசர் திரு. எஸ். என். எஸ். ராவ். "என்னுடைய கைப் பெட்டியில் எப்போதும் ஒரு ஸ்ட்ரிப் அனாஸின் இருக்கும்"

***சக்தி வாய்ந்தது***—ஏனெனில், உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும் வலி நிவாரணியை அதிக அளவில் கொண்டது அனாஸின். ஆகையால்தான் அனாஸின் வலியிலிருந்து விரைவிலேயே நிவாரணமளிக்கிறது.

***நம்பகமானது***—ஏனெனில், டாக்டரின் நம்பகமான மருந்தைப் போல் பல மருந்துகளின் கலவையே அனாஸின். அதை குழந்தைகளுக்கும் கொடுக்கலாம்—எல்லா மருந்துகளுக்கும் கேட்பது போல உங்கள் குழந்தைக்கான இதன் சரியான அளவையும் டாக்டரிடம் கேளுங்கள்.

ஜலதோஷம் மற்றும் ஃப்ளூவினால் ஏற்படும் வலிகள் மற்றும் நோவுகள், தலைவலி, முதுகுவலி, தசைவலி, பல்வலி ஆகியவற்றுக்கு அனாஸின் சக்திவாய்ந்த நிவாரணி

# அனாஸின்

**இந்தியாவின் புகழ் பெற்ற வலி-நிவாரணி**




Regd User of TM: Geoffrey Manners & Co., Ltd.

A-57

சிறிது நேரம் தாரிணியைச் சுற்றி ஒரே அல்லோல கல்லோலமாக இருந்தது. சிறிது நேரத்துக்குப் பிறகு அமைதி ஏற்பட்டது. எல்லாரும் அவரவர்களுடைய இடத்தில் உட்கார்ந்தார்கள்.

வேணிப் பிரஸாத் ராகவனைப் பார்த்து, "உங்கள் சிநேகிதர் மிக்க முரடர் போலிருக்கிறதே!" என்றார்.

"சுத்த இடியட்! செய்ததற்காக மன்னிப்புக்கூடக் கேட்டுக் கொள்ளாமல், தூரத்திலேயே உட்கார்ந்திருக்கிறான்!" என்றான் ராகவன்.

"இந்தச் சின்ன விஷயத்துக்கு எதற்காக இவ்வளவு தடபுடல் செய்கிறீர்கள்?" என்றாள் தாரிணி.

"நல்ல வேளை! நெற்றியிலே பட்டதோடு போயிற்று! ஒருவேளை கண்ணிலே பட்டிருந்தால் என்ன ஆகும்?" என்றான் ராகவன்.

"அதுதான் படவில்லையே? பின் எதற்காக இந்தப் பேச்சு! நீங்கள் எல்லாரும் சும்மா இருந்தாலே எனக்குப் பெரிய உதவியா யிருக்கும்!" என்று தாரிணி கூறினாள்.

சீதா மௌனமா யிருந்தாள். அவளுடைய உள்ளத்தில் ஒரு பெரும் கொந்தளிப்பு ஏற்பட்டிருந்தது. ஒரு சிறு கடுகத்தனை காயம் நெற்றியில் ஏற்பட்டதற்கு இவ்வளவு உபசாரமா, இவ்வளவு தடபுடலா என்று ஒரு கணம் நினைத்தாள். "இவளுக்கு நன்றாக வேண்டும்! காயம் இன்னும் கொஞ்சம் பெரிதாகப் பட்டிருக்கக் கூடாதா?" என்று மறு கணம் நினைத்தாள். "இந்தக் காயம் நமக்குப் பட்டிருக்கக் கூடாதா? நம்மையும் இப்படி யெல்லாரும் சூழ்ந்து உபசாரம் செய்வார்கள் அல்லவா?" என்ற எண்ணமும் ஒரு பக்கத்தில் இருந்தது. "பாவம்! சூரியா என்ன செய்வான்? தவறிப் பட்டதற்கு அவன்பேரில் இவ்வளவு எரிந்து விழுகிறார்களே?" என்று அநுதாபப்பட்டாள். "இந்த உலகத்திலேயே நம்மிடம் உண்மையான அபிமானம் உள்ளவன் சூரியா ஒருவன்தான். முன்னே யெல்லாம் அவனை நாம் கண்டபடி பரிகாசம் செய்து அவமானப் படுத்தினோமே?" என்று தன்னைத்தானே நொந்து கொண்டாள். தன்னுடைய அநுதாபத்தைப் பார்வையின் மூலம் தெரியப்படுத்த எண்ணிச் சூரியாவை அடிக்கடி நோக்கினாள்.

ஆனால் அவனோ ஆகாசத்தைப் பார்த்துக்கொண்டு ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியிருந்தான்.

தாஜ்மகால் நொறுங்கித் தாரிணிக்குக் காயம் பட்ட சம்பவத்துக்குப் பிறகு பேச்சு ஒன்றும் அவ்வளவாகச் சுவாரஸ்யப்படவில்லை.

"போதும் தாஜ்மகால் பார்த்த லட்சணம்; ஓட்டலுக்குத் திரும்பிப் போகலாமே?" என்றாள் சீதா.

"சரி" என்று சொல்லி எல்லாரும் உடனே எழுந்தார்கள்.

ஓட்டலுக்குச் சென்றதும் சூரியா தன் சாமான்களை எடுத்துக் கொண்டு அவசரமாக டில்லிக்குப் போகவேண்டும் என்று சொல்லிவிட்டு ரயில்வே ஸ்டேஷனுக்குப் புறப்பட்டான். (தொடரும்)

## தெரிந்த விளையாட்டு: தெரியாத விவரம்

## 12. பாட்மிண்டன்

○ பாட்மிண்டன், பூப்பந்தாட்டம், ஷட்டில்காக் என்று இருவகை. பாட்மிண்டன் அமெரிக்கருக்கும் பிரிட்டிஷ் மக்களுக்கும் குடும்ப விளையாட்டு. ஷட்டில்காக்குக்கு 'பாட்டில்டோர்' என்ற பெயருமுண்டு.

○ பிரிட்டிஷ் அதிகாரிகள் பூப்பந்தாட்டத்தை இந்தியாவிலிருந்து இங்கிலாந்துக்குக் கொண்டு சென்றார்கள் பாட்மிண்டன் என்ற ஊரில் முதன் முதலாக ஆடப்படவே அதன் பெயரும் 'பாட்மிண்டன்' என்றாகிவிட்டது. டியூக் பியூபோர்ட் வீட்டில் முதன் முறையாக இந்த விளையாட்டு நடந்தது.

○ ஷட்டில்காக் பாட்மிண்டனில் எண்ணிக்கை வாலிபாலைப் போலவே இருக்கிறது. 15 பாயின்ட் ஆடினால் போதும். சில சமயம் 21 பாயின்ட்களுக்கும் ஆடுவது உண்டு. பெண்மணிகள் தனியார் ஆட்டம் 11 எண்ணிக்கையிலேயே முடிந்துவிடும்.

- குண்டுமணி







## ஏன் இப்படி `டல்'லாயிருக்கிறள் ?

## ஓ, கோகுலம் வந்தாச்சா, அதுவும் ஒரு குட்டிப் பரிசோடு !

தனிப் பிரதி விலை 30 காசுகள்

வருட சந்தா ரூ. 7-00

ஆறு மாதம் ரூ. 3-50

★

இலங்கை ஆண்டுச் சந்தா ரூ. 9-00
(இலங்கை நாணயப்படி)

இதர நாடுகள் ரூ. 18-00

**1-7-72 இதழ்**

**கோகுலம் வாங்கி விட்டீர்களா ?**

(சந்தாத் தொகையை மணியார்டர் அல்லது சென்னையில் மாற்றக்கூடிய டிமாண்ட் டிராப்ட் மூலம் அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறோம்.)

अड़िशा सिमेंट लिमिटेड | ORISSA CEMENT LIMITED

4, SCINDIA HOUSE, NEW DELHI-1

POST BOX : 364
NEW DELHI-1

## எழுத்து மூலமே உத்தரவாதம் அளிக்கிறோம்

உங்களது உலைக் கற்கள் தேவைகளுக்கு ஒரிஸ்ஸா சிமெண்ட் ஸ்தாபனத்திற்கு ஆர்டர் கொடுத்தீர்களானால், உங்கள் உற்பத்தி தடைப்படாது. அவை குறித்த காலத்தில் உங்களுக்குக் கிடைக்கும்; காலதாமதமே ஏற்படாது என்று நிச்சயமாக நீங்கள் இருக்கலாம்.

உலைக் கற்களுக்கு ''டால்மியா'' என்பது. இவற்றை உபயோகப்படுத்துபவர்களுக்கு நன்கு தெரியும். நீண்டகால ஒப்பந்தத்தில் ஆர்டர்களையும் நாங்கள் ஏற்றுக் கொள்ளுகிறோம்.

Yours faithfully,
for ORISSA CEMENT LIMITED

Registered Office : RAJGANGPUR (Ori

**DALMIA**
**REFRACTORIES**

GOVAN/OCL/7113

# "ஸைக்கோ ஸாரநாதன்"



## 21. அவனுக்குள் ஓர் அசுரன்!

அமிர்தலிங்கம் இரவுச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு தன் அறைக்குள் நுழைந்தபோது மணி ஒன்பது இருக்கும். 'ரூம் பாய்' அவன் பின்னாலேயே நுழைந்தான், ''நைட் லேம்ப்'பில் 'கெரசின்' இருக்கான்னு பார்த்துட்டுப் போறேன், ஸார்!'' என்று கூறியபடியே.

''இந்த சிம்னி விளக்கு ஒண்ணு எதுக்கப்பா? நான் உபயோகிக்கறதே இல்லே'' என்ற அமிர்தலிங்கத்தின் கண்களில் தென்பட்டது, சுவரில் மாட்டியிருந்த கோட் ஸ்டாண்டிலிருந்து தொங்கிய படுக்கை கட்டும் கயிறு. அதைக் கையில் எடுத்தான்.

''இருக்கட்டும், ஸார்! கொடைக்கானலில் எப்போ லைட் எரியும், எப்போ அணையும்னு சொல்ல முடியாது. பட்டினி கிடந்தவனுக்குக் கூழும் விருந்து. அதுமாதிரி கரண்ட் ஃபெயில் ஆனால் அப்போதான் இந்தச் சிம்னி விளக்கின் மகிமை தெரியும். மினுக்கு மினுக்குன்னு இது எரிஞ்சுக்கிட்டிருந்தால், ஏதோ ராத்திரி எழுந்திருக்கும்படி ஆச்சுன்னு வைச்சுக்குங்க, லைட் ஸ்விச்சை இருட்டிலே தடவித் தடவித் தேடிக்கிட்டு இருக்க வேண்டாம் பாருங்க!''

படுக்கை கட்டுவதற்காக அமிர்தலிங்கம் வைத்திருந்தது நல்ல மணிக் கயிறு. அதிக தடிமனும் இல்லே, ட்வைன் நூல் போல ரொம்ப மெல்லியதும் இல்லே. அதை இடக் கரத்தில் சுற்றுவதும் பிரிப்பதுமாய் இருந்தான் அவன். கண்கள் 'ரூம் பாய்'யின் கழுத்தைக் குறி பார்த்துக்கொண்டிருந்தன.

''எனக்கொன்றும் இருட்டென்றால் பயம் இல்லே அப்பா!'' என்றான் அமிர்தலிங்கம்.

''பயம் கிடையாதுன்னு சொல்கிற ஆசாமியைப் பத்து நாட்களுக்குப் பிறகு இப்போதுதான் ஸார் பார்க்கிறேன்'' என்றான் அந்தச் சிப்பந்தி. விளக்கைக் குலுக்கிப் பார்த்து மண்ணெண்ணெய் போதும் என்று கண்டுகொண்ட அவன், ''வத்திப் பெட்டி இருக்கா ஸார்? ஏத்திட்டுப் போறேன்'' என்றான்.

''வேணும்னா அப்புறமா நானே ஏத்திக்கிறேன்'' என்றான் அமிர்தலிங்கம். ''தைரியசாலியைப் பார்த்துப் பத்து நாட்கள் ஆச்சுன்னு என்ன அர்த்தம்? எதுக்கு எல்லோரும் பயப்படறாங்க?'' அவன் கரம் கயிற்றைத் தளர்த்தித் தொங்க விடுவதும் இழுத்து நேர் கோடாக நிற்கச் செய்வதுமாய் இருந்தது.

''பயமா? பயம்னு இலேசாகச் சொல்லிட முடியுமா? ஸைக்கோ ஸாரநாதனை நினைச்சுக்கிட்டால் எல்லாருக்கும் குலை நடுக்கமால்ல இருக்கு?...பால் ஓவல், எதுனாச்சும் வேணுமா ஸார்?''

''அதுதான் டி. ஐ. ஜி. சொல்லிட்டாராமே, 'ஸாரநாதனாவது இங்கே வரவாவது? வீண் புரளி'ன்னு. அப்புறமும் எதுக்குப் பயந்து சாகணும்?''

''அந்தக் கையாலாகாத மனுஷன் வேறே என்ன ஸார் சொல்லுவார்? தமக்கு அந்த ஸைக்கோவைப் பிடிக்கத் துப்பு இல்லேன்னு ஒத்துக்குவாரா? வெறும் வெத்து வேட்டு! ஸாரநாதன் எந்த இடத்திலே எந்த



கி.ராஜேந்திரன்

ரூபத்திலே இருக்கானேன்னு எல்லோரும் திகிலடைஞ்சு போயிருக்காங்க. ஏற்கனவே ரெண்டு கொலை விழுந்தாச்சு. அடுத்தாற்போல் யார் மேலே அவன் கை போடுவானேன்னு அவனவனும் தன் கழுத்தைத் தடவிப் பார்த்துக்கிட்டு இருக்கான். இந்த டி. ஐ. ஜி. என்னடான்னா பிக்னிக் போனார். கேட்டா லீவிலே இருக்காராம்! நல்லா இருக்குதில்லையா கதை? நான் வரேன் ஸார்! குட் நைட்!''

''குட் நைட்!'' — இவ்வுலக வாழ்வுக்கே நிரந்தரமாக 'குட்நைட்' சொல்ல வேண்டிய கட்டத்தில் அல்லவா அவன் சில விநாடிகளுக்கு முன் நின்றான்! தன் பேச்சுத்தான் தன்னை மரணப் பிடியிலிருந்து மயிரிழையில் காப்பாற்றித் தந்தது என்பதை உணராமலேயே அந்தச் சிப்பந்தி போய்ச் சேர்ந்தான்.

அமிர்தலிங்கம் தன் கரத்திலிருந்த கயிற்றை வட்டமாகச் சுற்றி நாலு வடமாக்கி மீண்டும் கோட் ஸ்டாண்டில் தொங்க விட்டான். கதவைத் தாளிட்டு விட்டுச் சாத்தியிருந்த கண்ணாடி ஜன்னல்களின் கொக்கிகளெல்லாம் சரியாகப் பொருத்தப்பட்டுள்ளனவா என்று பரிசோதித்தான். திரைச்சீலைகளை இழுத்து மூடினான்.

ஆந்தைக் கண் மூக்குக் கண்ணாடியையும் டோப்பாவையும் கழற்றி மேஜையின் மீது எறிந்து விட்டுத் தாடி மீசையையும் பிய்த்துப்போட்டான். மழுமழுவென்றிருந்த கன்னத்தைத் தடவிக் கொடுத்துக் கொண்டான். அளவுக்கு மீறிய மன உளைச்சலால் வயதுக்கு ஒவ்வாத வகையில் விழுந்துவிட்ட வழுக்கையை ஒரு தடவை தடவினான். ஆனந்தமாக ஆகாயத்தில் மிதப்பது போலிருந்தது அவனுக்கு. 'டி.ஐ.ஜி. ஒருவர் எதையாவது பிதற்றிக் கொண்டிருந்தால் என்ன? மக்கள் நம்புகிறார்கள் —லாரநாதன் இங்கு இருக்கிறான், அவன் தான் இந்த இரண்டு கொலைகளையும் செய்திருக்கிறான் என்று.' சற்று முன் மணிக் கயிற்றை ஸ்பரிசித்தபோது முறுக்கேறிய உள்ளம் இப்போது தளர்ந்து இலேசாகி யிருந்தது. 'நாற்பத்திரண்டு+ஒன்று. அதாவது டாக்டர் குஹா+கொடைக்கானலில் இரண்டு நாற்பத்தைந்து. ஆனால் சே! அதில் ஒருத்தி பெண் பிள்ளையாகப் போய்விட்டாள். தொலையட்டும். ஆணுக்கு நிகராக அட்டகாசம் பண்ணுகிறவள்தான் அவள் என்று ஊரில் பேசிக் கொண்டார்கள். அவளை ஒதுக்கி விட்டாலும் பாக்கி நாற்பத்தி நாலு!'

லாரநாதன் ஒரு துள்ளுத் துள்ளிப் படுக்கையில் விழுந்தான். அந்த உற்சாகத் தாக்குதலைத் தாள முடியாமல் கட்டில் கிறீச்சிட்டது. குப்புறப் படுத்துக்கொண்டு படுக்கைக்கும் தலையணைக்கும் இடையில் இருந்த சந்தில் தன் முகத்தை நுழைத்தான். 'ம்...ம்...ம்... அம்மாவின் கழுத்து... ம்... ம்... 'கண்களை மூடிக் கொண்டு மெல்லக் கன்னத்தை அந்த இடுக்கில் உரசினான். 'சே! அம்மாவின் கழுத்து இவ்வளவு சொரசொரப்பாவா இருக்கும்?' குபுக்கென்று நீர் பெருகியது அவன் கண்களில். விம்மலோ விசும்பலோ இன்றிக் கண்ணீர் உகுத்தான். அம்மாவுடைய கழுத்தின் மென்மையை அனசூயாவை அணைத்தபோது ஓரளவு ஸ்பரிசிக்க முடிந்தது. அதற்குள் அவள் வீறிட்டு அலறி ரகளை செய்து ரசனையைக் கெடுத்தே விட்டாள். லாரநாதன் சரேலென்று எழுந்து தன் பெட்டியில் எதையோ பரபரவென்று தேடினான். அது அகப்படத் தாமதமானபோது அவன் பொறுமை இழந்து பெட்டியை அப்படியே தரையில் குப்புறக் கவிழ்த்தான். தரையில் விழுந்த துணிமணிகளைக் கிளறினான். அது அகப்பட்டு விட்டது. கிழிந்துபோன ஒரு ரவிக்கை. பட்டு ரவிக்கை. சாயம் மங்கிப் பொலிவிழந்து கிடந்த அதை அன்பாகத் தடவினான். விருட்டென்று அதைப் படுக்கை





யில் தலையணைக்கும் மெத்தைக்கும் இடையில் நறுவிசாக மடித்து வைத்து முன் போலவே தன் முகத்தை அந்த இடுக்கில் புதைத்து இலேசாக அசைத்துக் கன்னங்களை அப்பட்டில் தேய்த்துக் கொண்டான். 'ம்ம்ம்... என்ன சுகம்! அம்மா கண்ணா! நாற்பத்தி நாலு ஆச்சு. போதாதா! இன்னும் இரண்டு பேரா! அவர்களையும் தீர்த்துக் கட்டிய பிறகு அதுவும் போதாது இன்னும் இரண்டு என்பாய்! எனக்குத் தெரியாதா உன் ஜாலம்!' ஸாரநாதன் யாரோ கிசுகிசு மூட்டியது போல் சிரித்தான்! 'நானும் சரி என்று பழி வாங்கும் படலத்தைத் தொடர்வேன்!' அவன் சிரிப்பு நீடித்தது மேலும் சற்று நேரம்.

திடீரென்று அவன் எழுந்து டிரெஸ்ஸிங் டேபிள் முன்னே ஸ்டூலில் உட்கார்ந்து கொண்டான். மேஜை மீது இருந்த டோபாவை எடுத்துத் தலையில் வைத்துப் பார்த்தான். நிலைக் கண்ணாடியில் தெரிந்த உருவத்தை நோக்கி முகம் நெருங்கி அதன்மேல் உமிழ்வது போல் பாவனை காட்டினான். டோபாவை மீண்டும் கழற்றிப் போட்டான். இப்போது நிலைக்கண்ணாடியில் தெரிந்த உருவத்தை நோக்கிப் புன்னகை செய்தான். 'உன் புகழ் கொடி கட்டிப் பறக்கிறதடா ஸாரநாதா! மகிழ்ச்சியில் நீ திளைத்துப் போ!' என்று வாய் விட்டுச் சொன்னான், தலையில் முன் வழுக்கையைத் தடவிக் கொடுத்தபடியே.

நிலைக் கண்ணாடியில் பிரதிபலித்த முகம் திடீரென்று சிறுத்துக்கொண்டே போயிற்று. அது தொலைவில் சென்றதோடு அதன் முதுமையும் குறைந்து கொண்டே வந்தது. இளமை கூடி ஒரு சிறுவனின் முகமாகவே ஆகிவிட்டது. ஆனால் ஸாரநாதனின் முகத்தில் சற்று முன் நிலவிய புன்னகை இந்தச் சிறுவனின் முகத்தில் காணோம். ஏக்கம் அப்பிக் கிடந்தது. சோகம் தன் முத்திரையைப் பதித்திருந்தது.

இழைப்புளி போட்டு அச்சிறுவன் ஒரு மரக் கட்டையை இழைத்தான், நாற்காலி தயாரிக்க. கை சோர்ந்து சற்று நிற்கும்போது ஒரு முரட்டுக் கரம் அவன் காதைப் பிடித்து அழுத்தித்

திருகியது. ''விடுய்யா'' என்று கோபத்தோடு முறைத்தான் சிறுவன்.

''ஏலே! ரோஷத்தைப் பார்க்கலேயா?'' என்று எகத்தாளமாகப் பேசினன் காப்பாளன். ''திருடிப்பிட்டுச் சீர்திருத்தப் பள்ளிக்கு வந்து சேர்ந்த கழிசடைக்குத் தன்மானம் வேறு கேடா?''

''நான் திருடணும்னு ஆசைப்பட்டுத் திருடலேயே? வேலேயோ கூலியோ கிடைக்கல்லே. பசி எடுத்தது. வயிற்றை நிரப்பிக் கொள்ளத் திருடினேன். பின்னே சாவச் சொல்றியா?''

''செத்து ஒழிஞ்சால் தேவலேயேடா! திருட்டுக் குணத்தைப் பரம்பரைச் சொத்தா வளர்த்துக்கிட்டே போறீங்களே! உங்க அப்பன் கொலேக் கேஸிலே சம்பந்தப்பட்டுப் பத்து வருஷங்கள் கம்பி எண்ணிட்டு வந்தான். பெண்டாட்டியை அவன் சோத்துக்கு என்ன பண்ணினேன்னு தட்டிக் கேட்டப்போ அவளும் உன் மாதிரிதான் பதில் பேசினளாம். வயிற்றுப் பசியைத் தணிச்சுக்கிடத்தானே உடலே வித்தேன். அதிலே என்ன தப்புன்னு கேட்டாளாம்!'' சரேலென்று காப்பாளன் மேல் பாய்ந்தான் சிறுவன். அவன் முகத்தைக் கூரிய நகங்களால் பிராண்டி எடுத்துவிட்டான்.

''என் அம்மாவைப் பத்தித் தப்புத் தண்டாவா எதுவும் சொல்லாதே! கொன்னுப் போடுவேன்! கொன்னு!'' என்று அலறினன்.

பலம் மிக்க கரங்கள் இரண்டு, சிறுவனின் வாழைத் தண்டுக் கைகளேப் பற்றின. முறுக்கிப் பின்பக்கம் கொண்டு சென்றன. வேதனே தாளாமல் அவன் வளைந்து திரும்பியபோது ஒரு தள்ளுத் தள்ளின. குப்புறத் தரையில் விழுந்தான் சிறுவன் ஸாரநாதன். மூக்கிலிருந்து ரத்தம் குபுகுபுவென்று பெருகியது. காப்பாளனின் கால் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ள ஊறலெடுத்தது. உதைகள் தாராளமாய் விழுந்தன சிறுவனின் விலாவிலும் முதுகிலும். ''திருட்டு நாயே! என் மேலே கைவைக்கத் துணிஞ்சியா நீ! ஏலே! என் முகத்தை நீ பிராண்டிப்புட்டா உன் தாய்க்காரி பதிவிரதையாகிவிடுவாளா?''

சிறுவன் புரண்டு கொடுத்து அவன் கால்களேப் பற்றிக் கொண்டான். ''அப்படிச் சொல்லாதீங்க ஐயா! அவள் உழைச்சுச் சம்பாதிச்சா. உள்ளங்கையெல்லாம் இங்கே கிடக்கிற தேக்குப் பலகை மாதிரி ஆயிடுச்சு. எனக்காகத்தான் அவ்வளவு கஷ்டப்பட்டா.''

கால்களே உதறி விடுவித்துக்கொண்டான் காப்பாளன். ''அப்படிச் சொல்லாதே சொல்லாதேன்னு என்கிட்டே புலம்பி என்னடா புண்ணியம்? அதுதான் உன் அப்பனே கேட்டுப்பிட்டானே பத்து வருஷங்கள் எப்படிப் பதிவிரதையா இருந்திருக்க முடியும்னு! அப்படி ஒரு கேள்வியை நிறுத்தி வைச்சுத்தானே அவளேத் தூக்கிலே தொங்க விட்டான்! அக்கம் பக்கத்திலே எல்லார் காதிலும் அவன் போட்ட கூச்சல் விழுந்துச்சே! உன்னேக் கோர்ட்டிலே திருட்டுக் குற்றத்துக்கு விசாரிச்சபோது இந்த விவரமெல்லாமும் வெளி வந்து சந்தி சிரிக்கப் போச்சே! இப்போ நான் கம்முன்னு இருந்துட்டா இதெல்லாம் இல்லேன்னு ஆயிடுமா?''

''அதெல்லாம் நிஜம் இல்லே ஐயா! என் அப்பா அநியாயமா அவளேச் சந்தேகிச்சுக் கூச்சல் போட்டாரு. அக்கம் பக்கத்திலே இருந்தவங்க அதைக் கேட்கப் போகப் பின்னுலே அப்படியே சாட்சியமும் சொல்லிட்டாங்க. அம்மா என்மேலே உசிரையே வைச்சிருந்தாங்க. அக்கிரமமான வழியிலே பணம் சம்பாதிச்சு என்னே அவமானத்துக்குள்ளாக்குவாங்களா?'' விசும்பி அழுதான் ஸாரநாதன்.

''களவாணிப்பயலே! சித்தே முன்னுடிப் புலி மாதிரி சீறிப்புட்டு இப்போ ஏன் பொம்புள்ளே மாதிரி அழுவுறே? போடா, போய் வேலேயைப் பாரு!'' என்று அதட்டினன் அவன்.

இழைப்புளியைக் கரத்தில் எடுத்துக் கொண்டு—பின்னங்கைகளால் கண்களேத் துடைத்தபடி இழைக்கப்பட வேண்டிய மரம் இருந்த மேடையை நெருங்கினன் ஸாரநாதன்.

போகிற போக்கில் காப்பாளன் கடைசியாகச் சொன்ன கொடூரமான வார்த்தைகள் அவன் காதில் தெளிவாக விழுந்தன.

''நல்லாக் கேட்டு மனசிலே பதிய வைச்சுக்கடா! எப்போ கோர்ட்டிலே அவன் சோரம் போனவள்னு நாலு பேர் கூண்டிலேறிச் சாட்சி சொல்லிட்டாங்களோ, இனிமே அவளே மனசாலே நினேச்சுப் பார்க்கிற ஒவ்வொரு ஆம்பிள்ளேக்கும் அவள் தாசிதான்! தாசியேதான்! புரிஞ்சுதா?''

நன்ருகப் புரிந்தது ஸாரநாதனுக்கு, இந்தக் காப்பாளனே இன்றில்லாவிட்டாலும் இன்னெரு நாள் கொன்று தீர்த்துவிட வேண்டும் என்று. அப்படியே தன் தாயாரைத் தாசி என்று

# பச்சை நிற கோலினாஸ் குளோரோபில் வாய் துர்-நாற்றத்தை வெல்லுகிறது.

**பச்சை நிற கோலினாஸ் குளோரோபில் பற்பசையில் குளோரோபில் அடங்கியுள்ளது. பசும் இலைகளி-லிருந்து ஆக்கம் பெறும் குளோரோபில் இயற்கையாகவே துர்நாற்றம் போக்கும் தன்மையுடையது.**

பச்சை நிற கோலினாஸ் பற்பசையால் பல் துலக்கி, அருவருப்பான வாய்நாற்றம் போக்குங்கள். அதன் புதுமையான 'மின்டி' சுவையையும் வளமான நுரையையும் நீங்கள் ரசிப்பீர்-கள். இரவிலும் காலையிலும் பச்சைநிற கோலினாஸ் குளோரோபில் பற்-பசையால் பல் துலக்குங்கள்.

**இந்த 'நட்பு மிக்க மூச்சு' சோதனையை நீங்களே செய்து பாருங்கள்.**

**உங்கள் வாய்க்கு அருகில் உள்ளங்கையைப் பிடியுங்-கள். அதன் மீது நீண்ட மூச்சு விடுங்கள். விரைவாக மூச்சை உள்ளுக்கு இழுங்-கள். பிறகு பச்சை நிற கோலினாஸ் குளோரோபில் பற்பசையால் பல் துலக்குங்கள். சோதனையை மீண்டும் செய்து பாருங்கள். இப்போது உங்கள் மூச்சு தூய்மையுடன் இனிமையாக விளங்குவதைக் காண்பீர்கள்.**




KC-8

**பச்சை நிற கோலினாஸ் குளோரோபில்**

Regd User of TM : Geoffrey Manners & Co., Ltd.

எண்ணக்கூடிய மனம் கொண்ட ஆண் வர்க்கம் முழுமையையுமே கொன்று குவித்து விட்டாலும் நல்லதுதான்! தன் தாயின் அழகிய மென்மையான நீண்ட கழுத்தைக் கயிறு சுற்றி வளைத்ததுபோல் இந்த ஆண் வர்க்கமும் கழுத்தில் கயிறு இறுகச் சாக வேண்டும்! சாகத்தான் வேண்டும்!

அவன் எந்த ஒரு சந்தர்ப்பத்துக்காகக் காத்திருந்தானே, அது ஒரு நாள் கிடைத்தது. அவன் காப்பாளனைக் கொன்றுவிட்டு வேறு இரு காவலர்கள் கண்ணில் மண்ணைத் தூவிவிட்டுச் சீர்திருத்தப் பள்ளியிலிருந்து தப்பி ஓடி வந்தபோது அவன் சிறுவனாக இருக்கவில்லை. வாலிபனாக விளங்கிய அவன் மனம் அவனுக்கேற்பட்ட அலாதி அனுபவங்களின் விளைவாக முதிர்ச்சி அடைந்திருந்ததுடன் பேதலித்தும் போயிருந்தது. ஆனால் இந்த விகார குணம் சில தருணங்களில்தான் வெளிப்பட்டது. மற்ற சமயங்களில் அமைதியாக, முதிர்ச்சி அடைந்த மனத்தின் ஆளுகைக்கு அடங்கி நடந்து கொண்டது.

அவனுக்கு எங்கே போவது என்று தெரியவில்லை. சீர்திருத்தப் பள்ளியில் இருந்தவர்களைப் பார்க்க அவ்வப்போது பெற்றோர் அல்லது நெருங்கிய உறவினர் வருவதுண்டு. கடையில் வாங்கிய மிட்டாயோ அல்லது வீட்டில் செய்த தின்பண்டமோ கூடக் கொண்டு வந்து தருவார்கள். ஆனால் ஸாரநாதனைத் தேடி யாருமே என்றைக்குமே வந்ததில்லை.. யார் இருந்தார்கள் அவனுக்கு? அம்மா இறந்துவிட்டாள். அவள் மரணத்துக்குக் காரணமான அப்பா அன்று ஓடிப்போனவன்தான். போலீஸில் அகப்பட்டானே அல்லது செத்து ஒழிந்தானே ஒன்றும் தெரியாது. தெரிந்து கொள்ள வேண்டிய ஆர்வமோ அவசியமோ மகனுக்கு இல்லை. உறவினர் என்று யாருமே இல்லையோ அல்லது இருந்தும் சீர்திருத்தப் பள்ளியில் இருந்த அவனை வந்து காணப் பிடிக்கவில்லையோ, எப்படியானாலும் இன்று அவனுக்கென்று ஒருவரும் இல்லை, அவனுக்குத் தெரிந்தவரை.

அவன் ஊர் ஊராகப் போனான். எப்படியோ பம்பாய் சென்றடைந்தான். பகலோ, இரவோ, சில சமயம் பார்க்கிலோ, கடற்கரையிலோ நடைபாதையிலோ ஏகாந்தமான இடத்தில் அவனிடம் அப்பாவி எவனாவது அகப்பட்டுக் கொள்வான். அப்போது ஸாரநாதனின் அசுர குணம் குபீரென்று பொங்கி ரத்த நாளங்களில் பாயும். அவன் கரங்கள் பரபரக்கும். கண்கள் சிவக்கும். உதடுகள் துடிக்கும். ஒருவித வெறி—



''அடிக்கடி காப்பி குடிக்கிறது. வெற்றிலே பாக்குப் போட்டுக்கிறது இவைகளைத் தவிர எங்கிட்ட வேறே கெட்ட பழக்கம் எதுவும் இல்லே, டாக்டர்!''

''ஞாபக மறதியும் கொஞ்சம் இருக்கு போலிருக்கே!''

அடக்க முடியாத வெறி அவனை ஆட்டிப் படைக்கும். இரண்டு முழக் கயிறு அழகான, உறுதியான, வழுவழுப்பான மணிக் கயிறு அவன் கரங்களில் நெளியும். அடடா! கழுத்து என்கிற அவயவம்தான் எத்தனை சௌகரியமாய் அமைந்திருக்கிறது, உயிரைப் பறிக்க வசதியாக! சில சமயம் அவனது மரணப் பிடிக்கு ஆளானவர்களின் சட்டைப் பையில் கொஞ்சம் பணம் அகப்படுவதும் உண்டு. அதைக் கொண்டு சிறிது காலம் ஓட்டுவான். மற்ற நாட்களில் கூலி வேலை செய்து பிழைப்பான். யோக்கியமானவனாக, நாணய மிக்கவனாக எல்லாராலும் விரும்பப்படுபவனாக நடந்துகொள்வான் — மறுபடியும் அந்த உந்தல் தோன்றும்வரை; கரங்கள் மணிக்கயிற்றைக் கையாளத் தினவெடுத்துத் தவிக்கும்வரை!

* * *

**ஸா**ரநாதன் விழித்தெழுந்தபோது தான் நிலைக்கண்ணாடி எதிரே அமர்ந்திருந்த கோலத்திலேயே, டிரஸ்ஸிங் டேபிள்மீது கரங்களை வைத்துத் தலையணையாக்கி, அதன் மேல் தலைசாய்த்துத் தூங்கி விட்டிருப்பதை உணர்ந்தான். அவன் காலைக் கடன்களை யெல்லாம் முடித்துக் கொண்டு அமிர்தலிங்கமாக மீண்டும் உருமாறி அறையை விட்டு வெளியேறி டைனிங் ஹால் பக்கம் வந்தபோது, பத்மநாபன் கைக்குட்டையால் ஈரக் கையைத் துடைத்துக் கொண்டு வாசல்புறம் நின்று கொண்டிருந்தார். அவர் குடும்பமும் உடன் இருந்தது.

## கவர்ச்சிகரமான சலுகை!

தென் ஆப்பிரிக்க இன வெறி ஆட்சியாளர்கள் இனப் பாகு பாட்டுக் கொள்கையை ஓரளவு ''தளர்த்தி'' யுள்ளார்களாம். அதாவது சினிமாக் கொட்டகையில் வெள்ளையர்களுக்கு இடம் காட்டி அமரச் செய்யும் வேலைக்குக் கவர்ச்சிகரமான இளம் ஆப்பிரிக்கப் பெண்களை நியமித்துக் கொள்ளலாம் என்று. ஆயினும் இதற்கு ஒரேயொரு நிபந்தனை உண்டு. எக்காரணம் கொண்டும் அப்பெண்கள் காலியான ஆசனங்களில் அமர்ந்து விடக் கூடாதாம்!

ஆதாரம்: நியூடைம்ஸ்

''என்ன மிஸ்டர் அமிர்தலிங்கம், இவ்வளவு லேட்டு? முருகல் தோசை முதல் தரமாய் இருக்கு. ருசி பார்க்கிறீங்களா, இல்லே, கோழி முட்டையைத்தான் முழுங்கணுமா?''

''நீங்க விடற ஏப்பத்தைப் பார்த்தால் ஐந்து தோசைகளுக்குக் குறையாமல் உள்ளே இறங்கியிருக்கும் போலிருக்கே!'' என்றான் அமிர்தலிங்கம்.

''முதல்லே நாலு போதும்னுதான் நினைச்சேன். அப்புறம், இன்றைக்கு இருக்கோம், நாளைக்கு இருப்பது சந்தேகம்னு நினைவு வந்தது. இப்படிப்பட்ட நிலைமையில் கிடைக்கிற சந்தர்ப்பத்தை விடுவானான்னு 'இன்னொண்ணு போட்டுடுப்பா'ன்னுட்டேன்.''

''போதும்! அழகு பறக்க என்ன பேச்சு'' என்று தோளில் முகவாயை இடித்துக் கொண்டாள் அம்புஜம்.

''ஏன் ஸாரநாதனுடைய அடுத்த 'விக்டிம்'மா நீங்க மாட்டிக்குவீங்களோங்கற பயத்திலே பேசறீங்களா?'' என்றான் அமிர்தலிங்கம். ''ஒண்ணு வேணுமானா செய்யலாம். 'இரண்டுக்குப் பின் எப்போதும் வேண்டாம்'னு போஸ்டர் அச்சடித்து இந்த ஊரிலே மூலைக்கு மூலை அந்த ஸைக்கோ கண்ணிலே படற மாதிரி ஒட்டி வைக்கலாம்!''

''அதிலேயும் முதல்வர் படத்தைப் போட மறந்துடப்படாது'' என்றாள் அம்புஜம்.

''அப்படியாவது அவன் இரண்டு கொலைகளோடு நிறுத்திண்டு போய்ச் சேர்ந்தால் சரி. இதோ டி. ஐ. ஜி. வரார். அவரிடம் சொல்வோமா, போஸ்டர் ஐடியாவை?''

''அவசியம் சொல்லுங்க; அதோடு அவர் மகனைக் கோந்து டப்பாவை எடுத்துக்கிட்டுப் பின்னோடு போகச் சொல்லுங்க!'' என்றான் அமிர்தலிங்கம்.

''எதுக்குத் தாறுமாறாக ஒருத்தரைப் பற்றி அவர் எதிரே இல்லாதபோது பேசணும்? 'ஹி இஸ் டூயிங் ஹிஸ் பெஸ்ட்' '' என்றாள் மீனு கண்களில் அனல் பறக்க.

''மிஸ்! இதை என்கிட்டே சொல்லிப் புண்ணியமில்லே. இந்த ஊரிலே இருக்கிற ஜனங்க அத்தனை பேரிடமும் போய்ச் சொன்னீங்கன்னு கோபத்தில் அவங்க ஆளுக்கு ஓர் அறை கொடுப்பாங்க; வாங்கிக்கிட்டு வந்து சேரலாம்!''

''என்ன? என்ன மகாநாடு நடக்கிறது, இங்கே?'' என்று புன்னகையுடன் கேட்டுக் கொண்டே வந்தார் நடராஜன் டி. ஐ. ஜி. (ஸி. ஐ. டி.).

''உங்க பேரிலே ஊரிலே எல்லோரும் கோபமா இருக்காங்கன்னு பேசிக்கிட்டிருக்கோம்'' என்றார் பத்மநாபன்.

'''ஸாரநாதனைப் பிடிக்கத் தெரியலே. உதவாக்கரைப் பயல்'னு சொல்றாங்களாக்கும். சொல்லட்டும். பப்ளிக் ஸர்வண்ட்டாக வந்துட்டோம்னு இதுக்கெல்லாம் தயாராகத்தான் இருக்கணும். பீப்பிள் ஹேவ் எ ரைட் டு க்ரிடிஸைஸ்.''

''அதுக்காக வரம்பு மீறிப் பேசறதா? நாமும் கேட்டுண்டு சும்மா இருக்கறதா?'' என்றாள் மீனு கோபத்தோடு.

''தேங்க் யூ மீனு! நீ ஒருத்தி என் கட்சியில் இருந்தால் போதும், எதையும் தாங்கிப்பேன்'' என்றார் நடராஜன்.

''இதையும் சேர்த்துத் தாங்கிக்கிங்க-நேத்து ஆனந்தகிரியிலே நடந்த ஒரு பொதுக் கூட்டத்தில் நீங்க ஏன் ராஜிநாமா செய்யக் கூடாதுன்னு ஒருத்தன் கேட்டுட்டான்'' என்றார் அப்போது அங்கு வந்து சேர்ந்த ஹோட்டல் முதலாளி தனராஜ். ''இந்தக் கூட்டத்தில் மந்திரியும் கலந்துக்கிட்டார். அவர் இதை மறுத்தோ எதிர்த்தோ ஒரு வார்த்தைகூடச் சொல்லலே!''

''அதிலே ஆச்சர்யம் ஒண்ணுமில்லே'' என்றார் பத்மநாபன். ''அந்த மாதிரி 'ஹெல்த்தி ட்ரெடிஷன்' ஒரு காலத்திலே இருந்தது. சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் ஏதாவது தப்புச் செய்தாலும் மந்திரிகள் பொறுப்பேற்றுக் கொண்ட கண்ணியமான காலம். அது மலை ஏறிப் போச்சு. இப்போ பொறுப்பைத் தட்டிக் கழிக்கிற சகாப்தம். யார் பேரிலே பழியைச் சுமத்

# லஷ்மியின் விருப்பங்கள் பற்றிய ருசிகரமான தகவல்கள்

எழில் கொழிக்கும் லஷ்மியிடம், அவரது தற்கால விருப்பங்கள் சிலவற்றைப் பற்றிக் கேட்டோம். அவர் சிரித்துக் கொண்டே கூறியதாவது:

சித்தார்: அதன் மயக்கும் ஒலியினை நான் மிகவும் விரும்புகிறேன்.

வாசனைப் பொருள்கள்: மென்மையான அத்தர்.

ஞாயிற்றுக்கிழமை: வாரத்தில் நான் மிகவும் விரும்பும் கிழமை.

அவரது எழிலின் ரகசியத்தைப் பற்றிக் கேட்ட பொழுது அவர் புன்சிரிப்புடன் கூறினர். 'லக்ஸ்தான், எப்பொழுதுமே'.







'எனது மேனியின் பாதுகாப்புக்கு நான் வேறெந்த சோப்பையும் நம்புவதில்லை. மென்மையான லக்ஸ்தான் எப்போதும் நான் விரும்புவது'.

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு

# உங்கள் எல்லாத் தலைவலிகளையும்




## ஒரே ஒரு ஸாரிடான்

ட்ரேட் மார்க் 'ரோஷ்'

## போக்கிவிடுகிறது.

உங்கள் தலைவலியின் காரணம் எதுவாயினும் சரி, கைவசம் ஸாரிடான் வைத்திருங்கள். தலைவலி, உடம்புவலி, பல்வலி, அசௌகரியமான தினங்களில் ஏற்படும் வலி இவைகளால் ஏற்படும் சோர்வைப் போக்கும் வகையில் ஸாரிடான் விசேஷ கலவை முறையில் தயார் செய்யப் பட்டுள்ளது. சோர்வை நீக்கிப் புத்துணர்வு அளிக்கிறது. அதுவே ஸாரிடானின் தனிச்சிறப்பு—அது உங்களைத் துடிப்புடனும், மகிழ்ச்சியுடனும் வைக்கிறது.

ஸாரிடான் நிவாரணமளிக்கிறது. சோர்வை நீக்குகிறது. புத்துணர்வூட்டுகிறது.




ஒரே ஒரு ஸாரிடான் போதும்
ஒரு 'ரோஷ்' தயாரிப்பு

R.P-3840

திட்டு நாம பதவியிலே தொடர்ந்து ஒட்டிக்கலாம்னு பார்க்கிற காலம்!''

''பிளீஸ்! 'நோ பாலிடிக்ஸ்'' என்றார் நடராஜன்.

''பாலிடிக்ஸ் வேண்டாம் ஸார், என் பிஸினஸ்ஸைச் சொல்லுங்க'' என்று அழாத குறையாகப் பேசினார் தனராஜ். ''பாதிப் பேருக்கு மேலே அறைகளைப் பயத்திலே காலி பண்ணிட்டுப் போயிட்டாங்க. இன்னும் சிலர் இன்னிக்குக் கிளம்பறதா நோட்டீஸ் கொடுத்துட்டாங்க.''

''ஏன்னா! நாமும் கிளம்பிப் போயிடலாமே!'' என்றாள் அம்புஜம்.

''நோ அம்மா! கூடவே கூடாது! ஒரு மர்டர் மிஸ்டரியைப் பாதி படிச்சுண்டு இருக்கறச்சே புத்தகம் காணாமல் போன கதையாகிவிடும். கடைசிவரைக்கும் பார்த்துட வேண்டாமா, என்ன நடக்கிறதென்று?'' இவ்வாறு கூறி விட்டு மீனா ரங்கனைப் பார்த்தாள். 'மர்மமுமில்லே. ஒரு மண்ணுமில்லே. எனக்கு அதிலெல்லாம் அக்கறை கிடையாது. உங்களோடு இன்னும் சில நாட்கள் தங்க வேண்டுமென்பதற்காகத்தான் இப்படிப் பேசுகிறேன். புரிகிறதா?' என்று அவள் கண்கள் அவனை வினவின.

இதைப் பத்மநாபனும் ஒருவாறு புரிந்துகொள்ளத்தான் செய்தார். 'அடி கள்ளி! எங்ககிட்டே அகதா கிரிஸ்டியோட அக்கா மாதிரி விருப்பாப் பேசிட்டு அவனைப் பார்த்துக் கண் சிமிட்டறயா?' என்று தமக்குள் எண்ணிக் கொண்டார்.

''இந்த வருஷம் எனக்கு எவ்வளவு நஷ்டம்னு இப்பவே என்னால் கணக்குப் போட்டுப் பார்க்க முடிகிறது'' என்று தொடர்ந்து புலம்பினார் தனராஜ். ''அதை நினைக்கறச்சே அந்த ஸைக்கோ அடுத்தாற் போல் பரலோகத்துக்கு அனுப்புகிற ஆசாமி நானாக இருக்கக் கூடாதா என்றுகூடத் தோணுது!''

நடராஜன் அவர் முதுகில் தட்டிக் கொடுத்தார். ''சீர் அப்! ஒண்ணும் குடி முழுகிப் போய்விடாது. இப்போ பயந்து ஓடினவங்களுக்கு அதிகமாகவே திரும்பி வருவாங்க. ஸீஸன் முடிய இன்னும் இரண்டு மாதங்களுக்கு மேலேயே இருக்கே... அது சரி, இன்று பேரிஜம் போகுதா உங்க பஸ்? இல்லே, ஆளுங்க கம்மி என்று டிரிப்பைக் கான்ஸல் பண்ணிட்டீங்களா?''

''ஓர் ஆசாமியாயிருந்தாலும் பஸ் ஓடும். சாப்பிட இரண்டே பேர்தான் என்றாலும் அடுப்பு எரியும், இந்த ஹோட்டல்லே'' என்றார் தனராஜ், பெருமையுடன். ''பஸ் ரெடி... ஆனால் நீங்க போறீங்களா என்ன?'' என்று கேட்ட போது அவர் குரலில் தெம்பு இல்லே.

''கவலைப்படாதீங்க, தனராஜ்! நான் பேரிஜம் போனதாலே இன்வெஸ்டிகேஷன் ஒண்ணும் தடைப்படாது. இன்னின்ன காரியங்களைச் செய்யணும்னு உத்தரவு போட்டிருக்கேன்...... ஸைக்கோவோ, இல்லேயோ, குற்றவாளிகள் நிச்சயம் கண்டுபிடிக்கப்பட்டுத் தண்டனை அடைவார்கள்'' என்றார் நடராஜன். (தொடரும்)

---

# வெள்ளைப் புலி!

இந்த நூற்றாண்டு ஆரம்பத்தில் வெள்ளைப் புலிகள் அஸ்ஸாம், ஒரிஸ்ஸா, மத்தியப் பிரதேசக் காடுகளில் வசித்து வந்ததாகத் தெரிகிறது. ஆனால் இப்போ திருக்கும் வெள்ளைப் புலிகள் வம்சம், ரேவா காடுகளில் ஒன்பது மாதக் குட்டி யொன்று பிடிபட்டதிலிருந்துதான் ஆரம்பம். ரேவா மகாராஜா இதைக் கோவிந்தகட்டிலுள்ள தம் அரண்மனைக்குக் கொண்டு வந்து 'மோகன்' என்று பெயர் வைத்தார். மோகனுக்கும் பெண் புலி ஒன்றுக்கும் பிறந்த குட்டிகள் ஒன்றுகூட வெள்ளைப் புலியாக இல்லை. ஆனால் மோகனுக்கும் ராதா என்ற வேறொரு பெண் புலிக்கும் வெள்ளைப் புலிக் குட்டிகள் பிறந்தன. ராதாவுக்கும் பிறந்த குட்டிகள் 4. இந்த வம்சத்தின் ஆதியான 'மோகன்' அதன் 20வது வயதில் இறந்தது.

உலகில் இன்று 39 வெள்ளைப் புலிகள் இருக்கின்றன. இவற்றில் 25 இந்தியாவில் இருக்கின்றன. லண்டனில் இருப்பவை 10. அமெரிக்காவில் இருப்பவை 4. இந்தியாவில் தில்லியில் 13 வெள்ளைப் புலிகள் இருக்கின்றன. கல்கத்தாவில் இருப்பவை 7. ரேவா அரண்மனையில் இருப்பவை 5.

மஞ்சள் நிறப் புலியைக் காட்டிலும் வெள்ளைப் புலிகளின் நீளம், எடை, பருமன் எல்லாம் அதிகம். ஆனால் பழக்க வழக்கங்களில் வேறுபாடு எதுவும் கிடையாது.

ஆதாரம்: மத்திய அரசு வெளியிட்டுள்ள ''வன விலங்குகளைக் காப்போம்'' என்ற புத்தகம்.



அன்று ஆபீஸிலிருந்து திரும்பியவன், அடுத்த வீடு கலகலவென்றிருப்பதைக் கண்டேன்.

"என்ன லக்ஷ்மி, பக்கத்து வீட்டுக்கு யாரோ குடி வந்திருக்காப்பலே இருக்கே" என்றேன், சட்டையைக் கழற்றிக்கொண்டே.

"ஆமாம். வந்து ஒரு மணி நேரம் இருக்கும்" என்றாள் என் சகதர்மிணி.

"அப்படியா? யார் குடிவந்திருக்கா? அவருக்கு எங்கே வேலை, என்ன சம்பளம், எவ்வளவு குழந்தைகள், அவர் 'மனைவி'க்கு எவ்வளவு புடவைகள், நகைகள் இருக்கு—இதையெல்லாம் சொல்லு. வந்து ஒரு மணி நேரமாறதுங்கறயே!"

"ஆமாம். என்னை நையாண்டி செய்யாட்டா உங்களுக்குப் பொழுது போகுமா? அடுத்த வீட்டு வம்பைக் கேட்கத்தான் எனக்குப் பொழுதிருக்கா? வேலைக்காரி இல்லாமல் நான் படற கஷ்டம் உங்களுக்கு எங்கே தெரியப் போறது?"

"ஆமாம் லக்ஷ்மி. அது ஏன், எந்தப் பேச்சை எடுத்தாலும் கடைசியிலே இந்த வேலைக்காரிப் பிரச்னையிலே கொண்டு வந்து விட்டுடறயே. கடைசியா ஒரு வேலைக்காரி இருந்தாளே, அவள் ஒழுங்காகத்தானே இருந்தா? ஏன் உங்க ரெண்டு பேருக்கும் ஒத்துக்கலே?"

"உங்களுக்கென்ன சொல்வேன். அந்த மகாராணிக்கு அவள் வர்றதுக்கு முன்னேயே காப்பியைக் கலந்து வைச்சுண்டு நிக்கணுமாம். சரின்னு நானும் நின்னேன். அதைக் குடிச்சுட்டு அவ என்ன சொல்லு, தெரியுமா? நம் வீட்டுக் காப்பி கழுநீர் மாதிரி இருக்காம்."

"ம். எனக்குக் குடுக்கற மாதிரி காப்பி அவளுக்குக் கொடுத்திருப்பே!" என்று சொல்லிவிட்டு, அவள் என்னைச் சுட்டெரித்து விடு முன், அடுத்த வீட்டுக்கு ஓடினேன்.

லாரியிலிருந்து இறங்கும் சாமான்களை மேற்பார்வையிட்டுக் கொண்டிருந்தவரிடம் நேரே சென்றேன்.

"சார்தான் புதுசாக் குடி வந்திருக்காப்பலே இருக்கு."

"ஆமாம். நீங்க....."

"ஐ ஆம் மிஸ்டர் சங்கர். ஜி. பி.ஓ.விலே இருக்கேன், சார்....."

"ராகவன். ரயில்வேஸிலே இருக்கேன்."

"பசங்க....."

"ஒரு பையன்."

"எனக்கும் ஒண்ணுதான். 'பஜனை'க்குப் பாட்டு கீட்டு தெரியுமோ?"

"கட்டுப் போட்டாலும் வராது" என்றார் அவர் சுற்றும் முற்றும் பார்த்துக் கொண்டே.

12



# எதிரிக் கோட்டை!

சுபத்ரா ராம்குமார்







நிம்மதியாக மூச்சுவிட ஆரம்பித்தேன். பாட்டும், நாட்டியமும் அடுத்த வீட்டுக்குக் குடி வந்து முன்பு என்னை அலற வைத்தது அவருக்குத் தெரியுமா?

"உங்களுக்கு ஆயிரம் வேலை இருக்கும். நாளைக்கு நம்ப வீட்டுக்கு வாருங்களேன்."

"ஓ. எஸ். அதுக்கென்ன?"

அவரிடம் விடைபெற்றுக் கொண்டு அங்கிருந்து நகர்ந்தேன்.

**ம**று நாள் மாலை ராகவன் குடும்ப சகிதமாக ஆஜரானார்.





லக்ஷ்மி ஒரு தட்டில் மிக்ஸர் கொண்டுவந்து வைத்தாள்.

"ஹையா, மிக்ஸர்!" என்று ஒரு துள்ளுத் துள்ளினான் பாலு. அதே வேகத்தில் தட்டைக் காலி பண்ண ஆரம்பித்தான்.

"டேய், மெள்ளடா. எங்களுக்குக் கொஞ்சம் வை" என்று ஜானகி மெதுவாகச் சொன்னது என் காதில் தான் விழுந்தது. பாலுவின் காதில் அது விழவேயில்லை. அவன் பாட்டுக்கு மிக்ஸரை வாயில் அள்ளி, அள்ளி அடைத்துக் கொண்டிருந்தான்.

"பாலுவுக்கு மிக்ஸருன்னா உசிரு" என்றாள் ஜானகி அசட்டுச் சிரிப்புடன்.

"இதோ, உங்களுக்கு வேறே கொண்டு வரேன்" என்று உள்ளே போனாள் லக்ஷ்மி. ஜானகி ஓடி வந்து, "வேண்டாம், வேண்டாம். அதையும் பாலு விடமாட்டான். அவன் உடம்புக்கு ஆகாது" என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டாள்.

"பாலு என்ன கிளாஸ் படிக்கிறான்?" என்று கேட்டு வைத்தேன்.

"செகண்ட் கிளாஸ். ரொம்பக் கெட்டிக்காரன். பாடங்களிலே புலி" என்று ராகவன் சொல்லி முடிப்பதற்குள் பாலு, "ஆமாம், மாமா. நான் எல்லாப் பாடங்களிலும் ஃபெயில்" என்றான் பெருமையுடன்.

"அப்ப நாங்க கிளம்பறோம்" என்று ராகவன் எழுந்து நின்றார்.

நானும் விடை கொடுத்தேன்.

இதற்குப் பிறகு பாலு அடிக்கடி எங்கள் வீட்டுக்கு விஜயம் செய்ய ஆரம்பித்தான். அவன் படுகட்டியாக இருக்கலாம். அதற்காக அவன் கட்டித் தனத்தை யெல்லாம் என் வீட்டிலா காட்ட வேண்டும்?

ஒரு நாள் என் பேனாவைக் கொஞ்சிக் கொண்டிருந்தான்—ரிப்பேர் பண்ணுகிறானாம். மற்றொரு நாள் எங்கள் தோட்டத்திலிருந்த சூரியகாந்திச் செடியைப் பிடுங்கிக் கொண்டு வந்தான். உடைகிறதா, இல்லையா என்று பார்ப்பதற்காகப் பல சாமான்களைக் கீழே போட்டுப் பார்த்தான். இன்னும் இப்படி எத்தனையோ?

அன்று ராகவன் வீட்டுக்குப் போயிருந்தேன். "வாங்கோ மாமா, வாங்கோ" என்று வரவேற்றது பாலுதான்.

"மாமா, இன்னிக்கு உங்க வீட்டிலே என்ன டிபன்?" என்று பாலு கேட்டான்.

"உனக்குப் பிடிக்காத டிபன்தான்."

"உப்புமாதான் எனக்குப் பிடிக்காது."

இவனுக்குப் பிடிக்காததுகூட ஒன்று உண்டா என்று எனக்கு அதிசயமாக இருந்தது.

"ஆமாண்டா, உப்புமா தான்" என்றேன்.

இதற்குள் ர்ாகவன் வரவே எங்கள் பேச்சு திசை மாறியது. திடீரென்று ராகவன், "என் ஷர்ட்டிலேதானே இருந்தது பர்ஸ், எங்கே காணோம்?" என்று கத்தினார்.

"மாமாகிட்டே இருக்கா, பாருப்பா?" என்றான் பாலு சமர்த்தாக!

ராகவன் அப்பொழுதும் ஓர் அசட்டுச் சிரிப்பைத்தான் உதிர்த்தார்.

எனக்கு வந்த ஆத்திரத்தில் எழுந்து நேரே என் வீட்டுக்கு வந்தேன்.

இரண்டாங் கிளாஸ் பையன் என்னை இப்படி அவமானப் படுத்துவதா? என் வீட்டு மிக்ஸரைத் தின்றும்கூட நன்றியில்லாமல் பேசுகிறானே? இதற்கு ஒரு முடிவு கட்ட வேண்டும். ராகவன் ஒரு பாலுவை வைத்துக் கொண்டு என் கழுத்தை அறுத்தால்,

நான் ஒரு மணியை வைத்துக் கொண்டு அவர் கழுத்தை அறுக்கப் போகிறேன்!

என் புத்திரசிகாமணி மணியை நினைத்தால் எனக்குப் பற்றிக் கொண்டு வந்தது. சாதுவிலும் சாது, பரம சாது அவன். வாயில் விரலைக் கொடுத்தாலும் அவனுக்குக் கடிக்கத் தெரியாது. இவனை எப்படி நான் திருத்தி அடுத்த வீட்டுக்காரரை அறுக்கப் போகிறேனோ? ஆனாலும் அதை நான் செய்துதானாக வேண்டும்!

''டேய், மணி!''

'' என்னப்பா ?''

''நாளையிலிருந்து நீ பாலு வீட்டுக்குப் போகணும்டா.''

''ஐயையோ ! நான் மாட்டேன். எனக்கு அந்தப் பாலுவைப் பார்த்தாலே பயமாயிருக்கு.'' — என் கையில் அகப்படாமல் ஓடினான் மணி.

ஆரம்பத்தில் இப்படித்தான் மிரளுவான். போகப் போக அவனை வழிக்குக் கொண்டு வந்து விடலாம் என்று தைரியப்படுத்திக் கொண்டேன்.

பாலுவின் பள்ளிக்கு லீவு விட்டவுடன், ராகவன் ஹாய்யாக ரயில்வே பாஸில் டில்லிக்குப் புறப்பட்டுவிட்டார், குடும்பசகிதமாக.

அவர்கள் திரும்பி வருவதற்குள் மணியைத் தயார்ப்படுத்த வேண்டும் என்று முழு மூச்சோடு முனைந்தேன். ஆபீஸ் நேரம் தவிர மற்ற நேரத்தில் அவனுக்கு டியூஷன் கொடுத்தேன். ரப்பர் பேண்டால் அடிக்கக் கற்றுக் கொடுத்தேன். சுவரில், 'மாமா ஒரு அசடு' என்று பாலுவைப் போல் எழுதக் கற்றுக் கொடுத்தேன். புது புத்தகத்தைப் படித்துக் 'கிழிக்க'க் கற்றுக் கொடுத்தேன். பையன் 'இம்ப்ரூவ்' ஆகிக் கொண்டு வந்தான்.

லீவு முடிந்து ராகவன் திரும்பினார். மணியை அன்று எதிரிக் கோட்டைக்கு வெற்றிவாகை சூடி வர அனுப்பினேன்.

'' ஏதேனும் விஷமம் செய்யாமல் வந்தால் கொன்றுவிடுவேன்!'' என்று அறிவுறுத்தினேன்.

சிறிது நேரத்தில் தலைதெறிக்க ஓடிவந்தான் மணி.

''என்னடா, என்ன பண்ணிட்டு வரே?''

''வந்துப்பா, அவ வீட்டிலே ஒரு பொம்மை மேலே வைச்சிருந்தா. அதை எடுத்துக் கீழே போட்டு உடைச்சேம்பா. அந்த மாமாகூடப் பார்த்துட்டார்'' என்று பதிலளித்தான் மணி மகிழ்ச்சியோடு.

''சபாஷ்டா மணி. உனக்கு இன்னிக்கு ஒரு ரூபாய்க்கு மிட்டாய் வாங்கித் தரேன்'' என்று அவனைத் தட்டிக் கொடுத்தேன்.

என் மனம் திருநெல்வேலி ஹல்வாவை ஒரு கை பார்த்ததுபோல் இனித்தது. இனி எந்தத் தைரியத்தில் பாலுவை இங்கு அனுப்புவார்கள்? பாலு என் வீட்டுக் கதவில் கிறுக்கினால், மறு நாள் மணி அவர்கள் வீட்டுச் சுவரில் தன் கைவரிசையைக் காட்டுவான். பாலு என் வீட்டு டிபனைக் காலி செய்தால், மணி ராகவன் வீட்டு டிபனைக் கபளீகரம் செய்வான்.

இந்த ஆனந்தமயமான எண்ணங்களில் ஆழ்ந்திருந்த என்னை ராகவனின் குரல் விழிப்படையச் செய்தது.

''வாங்கோ சார். டில்லிப் பிரயாணம் எல்லாம் எப்படி ?''

''ரொம்ப நன்னா இருந்தது.''

''நான் ஒரு தாஜ்மஹால் பொம்மை வாங்கிண்டு வரச் சொல்லியிருந்தேனே?''

'' அதைச் சொல்லத்தான் சார், வந்தேன். நீங்க கொடுத்த இருபது ரூபாயிலே ரொம்ப அழகா ஒரு பொம்மை வாங்கிண்டு வந்தேன். பாலு கைக்கு எட்டாமல் அதை மேலே வைச்சிருந்தேன். ஆனால் பாருங்கோ, உங்க பையன் மணிக்கு ஏதோ கோபம் போலே இருக்கு. அங்கே வந்து ஒரு ஸ்டூல் மேலே ஏறி அந்தப் பொம்மையைத் தள்ளி உடைச்சுட்டான். இருபது ரூபா உங்களுக்கு நஷ்டம் ஆயிடுத்து. மணியோட விஷமத்தைக் கொஞ்சம் கவனியுங்கோ.''

ராகவன் போய் விட்டார்.

''ஏன்னா, அங்கே தலையிலே கையை வைச்சுண்டு உட்காராமே இங்கே கொஞ்சம் வரேளா? உங்க அருமை மகன் இருக்கானே, அவனுக்குப் பாலுவைப் பார்த்தா பயமா இருக்காம். அதனாலே அடுத்த வீட்டுக்குப் போகாமே இங்கேயே நீங்க கத்துக் கொடுத்த விஷமமெல்லாம் பண்ணிண்டிருக்கான். உங்க ஹேர் ஆயில் பாட்டிலை உடைச்சுட்டு, இப்ப உங்க டெர்லின் ஷர்ட்டிலே இங்கை அபிஷேகம் பண்ணிண்டிருக்கான். கேட்டா, அப்பாவுக்கு இதெல்லாம் பிடிக்கும்கிறான்.''

திருடனுக்குத் தேள் கொட்டிப் பார்த்திருக்கிறீர்களா? இல்லையென்றால் என் வீட்டுக்கு வந்து பாருங்களேன் !

---

## குறி தவறியது !

துப்பறியும் நாவல்கள் எழுதிப் புகழ் பெற்ற ஏர்ல் ஸ்டான்லி கார்ட்னர் ஆரம்ப காலத்தில் எழுதிய கதைகளில் ஒரு வேடிக்கையைப் பார்க்கலாம். கதாநாயகன் வில்லனைப் பார்த்துச் சுடுவான். ஆனால் குண்டு உடனே அவன் மேல் பாயாது. கதாநாயகன் மீண்டும் சுடுவான் குண்டு அப்பொழுதும் தவறிவிடும். கதாநாயகன் ஐந்து தடவைகள் சுட்டுக் குறி தவறிய பிறகு, ஆறாவது தடவைதான் சரியாகச் சுடுவான்.

கிட்டத்தட்ட எல்லாக் கதைகளிலும் கதாநாயகன் ஐந்து தடவை தவறவே, பிரசுரகர்த்தருக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. அவர் ஒரு நாள் ஏர்ல் ஸ்டான்லி கார்ட்னரைக் கூப்பிட்டு, இதுபற்றி விசாரித்தார்.

அதற்கு ஏர்ல் ஸ்டான்லி கார்ட்னர், ''நான் என்ன பண்ணுவேன்? என் கதையை வளர்க்கத்தான் இப்படிச் செய்கிறேன். 'நீங்கள் நான் எழுதுவதற்கு வார்த்தைக்கு மூன்று சென்ட்' என்று பணம் கொடுப்பதால், கதாநாயகன் ஒவ்வொரு தடவை குறி தவறும்போதும், எனக்கு வருமானம் அதிகமாகிறது'' என்று சொன்னார். - நாடோடி





"GOKUL"
SANTOL
SANDAL WOOD

# இளைஞர் சமுதாயம்





■ வள்ளுவர் மன்றத்தில் பிரார்த்தனை நடைபெறுகிறது.

■ ஏழைச் சிறுவர்களுக்குக் கல்வி போதிக்கிறார்கள்.

## 12. 'அவன் நிலையில் நான் இருந்தால்....?'

வழக்கத்துக்கு மாருக அன்று டாக்சி டிரைவர் ஒரே சீரான வேகத்தில், நெறி தவருத மகாபுருஷரைப் போல், வண்டியை ஓட்டிக் கொண்டிருந்தார். பூந்தமல்லி ஹைரோட்டில் கீழ்ப்பாக்கம் மருத்துவக் கல்லூரி அருகே வந்தபோதுதான் காரணம் புரிந்தது எனக்கு. நடைபாதையில் இரண்டு மூன்று போலீஸ் அதிகாரிகள் நின்று கொண்டிருந்தனர்!

''இன்னு ஸார், போலீஸ் இங்கே நிக்கறது எனக்கு எப்படிப் புரசவாக்கத்திலேயே தெரிஞ்சுதுன்னு பார்க்கிறீங்களா? எதிரே வந்த டாக்ஸி டிரைவர் நம்ம தோஸ்து! ஒரு ஸிக்னல் கொடுத்தாரு. உடனே நான் உஷாராயிட்டேன்!''

''எப்பவுமே டாக்ஸி ஓட்டும்போது உஷாராய்த்தானே இருக்கணும்? போலீஸைக் கண்டால்தான் ஒழுங்காய்ப் போகணுமா?'' என்று கேட்டேன்.

உடனே டிரைவர், 'இது படா பேஜார் புடிச்ச வேலை ஸார்!' என்று ஆரம்பித்து, டாக்ஸி சொந்தக்காரர்கள், போலீஸார் — ஆகியோரால் டாக்ஸி டிரைவர்கள் எவ்வளவு சிரமப்படுத்தப்படுகிறார்கள் என்று விளக்கிக் கொண்டே போனார். அவர் சொன்னதை எல்லாம் கேட்டபோது, 'அடடா! டாக்ஸி டிரைவர்களைக் குறை கூறலாமா? அவர்கள் நிலையில் நாம் இருந்தாலல்லவா தெரியும்' என்று தோன்றியது. ஆனால் இப்படியே டாக்ஸி சொந்தக்காரர்கள், போலீஸார் ஆகியோருக்கு உள்ள சிரமம் அவரவர்களுக்குத்தானே தெரியும் என்றும் வாதிக்கலாம் அல்லவா? ஏறத்தாழ இதே போன்ற ஒரு குழப்பமான நிலையைச் சந்திக்க நேர்ந்த போது, கோவைக்கு அருகில் உள்ள கோவனூர் வள்ளுவர் மன்றத்தினர் தைரியமாக அதனை எதிர்த்து விடை கண்டிருக்கின்றனர். கோவையிலிருந்து பதினான்காவது மைலில் உள்ளது கோவனூர். 1—5—67 அன்று இச் சங்கம் தொடங்கப்பட்டது. அங்கத்தினர்கள் அனைவரும் இளைஞர்கள். குறள் வழி நடக்கும் கொள்கையைக் கொண்டது இச்சங்கம். இவ்வூருக்குச் செல்லும் சாலையின் இரு புறங்களிலும் வரிசையாகத் தென்னை மரங்கள், கம்பு, கரும்பு, நெல் பயிர்கள் வளர்ந்து ஊர் முழுவதும் பசுமைப் புரட்சி நடந்து கொண்டிருந்தது. நல்ல வெய்யில் வேளையில், அவ்வூரில் வெய்யிலே தெரியாமல் 'ஏர்கண்டிஷன்' செய்யப்பட்டது போல் 'ஜிலு ஜிலு' என்று இருந்தது.

வள்ளுவர் மன்றத்தின் தலைவர் திரு ரா. அய்யாசாமி தொண்டு செய்யும் ஆர்வம் கொண்ட இளைஞர். ஒரு தொழிற்சாலையில் வேலை செய்கிறார். பொதுத் தொண்டைப் பற்றி அவரிடம் பேசிக் கொண்டிருந்தபோது அவர் கூறினார்: ''பொதுத் தொண்டு சரி வர நடக்க வேண்டுமானால், பிறர் மீது குறை கூறும் மனப்பான்மையை மாற்றிக் கொள்ள வேண்டும். துணிந்து பொறுப்பை ஏற்க முன் வரவேண்டும். அதற்கு எடுத்துக்காட்டாக எங்கள் மன்றத்தின் மூலமே ஒரு சாதனையைச் செய்திருக்கிறோம். பஞ்சாயத்து யூனியன் தலைவரைக் குறை கூறுவது சாதாரணமாக எந்த ஊரிலும் உள்ள வழக்கம்தான். நாங்கள் வெறுமனே குறை சொல்லுவதோடு நின்று விடாமல், வள்ளுவர் மன்றத்தின் முன்னாள் செயலாளரும், இளைஞர் சமுதாயத்தின் வாசகரான திரு ம. பொன்னுசாமியை நாயக்கன்பாளையம் ஊராட்சி ஒன்றியத்தின் தலைவர் தேர்தலுக்கு நிற்கச் செய்து அங்கத்

தினர்களின் அரும் பெரும் முயற்சியால் வெற்றி பெறவும் செய்தோம். ஊராட்சி ஒன்றியத்தின் தலைவராக ஓர் இளைஞர் வர வாய்ப்பில்லை என்று ஓயாமல் சொல்லிக் கொண்டிருப்பதில் எவ்விதப் பயனும் இல்லை. நம் முயற்சியால் ஓர் இளைஞனுக்குத் தலைவனாகும் வாய்ப்பை அளித்து அவன் மூலம் ஊரின் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டும் என்று திட்டமிட்டுச் செயல்பட்டோம்.

''ஒரு பதவியில் உள்ள பொறுப்புக்களையும் அவற்றை நிறைவேற்றுவதில் உள்ள சிரமங்களையும் அந்தப் பதவியை வகித்துப் பார்த்தால்தானே தெரியும்! அதே சமயம், புதுமைக் கருத்துக்களும், புரட்சி மனப்பான்மையும் கொண்ட இளைஞர்கள் பொறுப்பான பதவிகளை ஏற்க முன்வந்தால், சமுதாயத்திலுள்ள பல இழுக்குகள் தாமே மறைந்துவிடும்.''

திரு அய்யாசாமி தொடர்ந்தார்: ''எங்கள் வள்ளுவர் மன்றத்தின் மூலம் நாங்கள் பல பொதுத் தொண்டுகள் செய்து வருகிறோம். இந்தக் கிராமத்தைச் சுற்றி நிறைய ஆதிவாசிகள் இருக்கிறார்கள். அவர்கள் பேசுவது சிதைந்த தமிழ் மொழி. புதிய மாதிரியாக ஒலிக்கும். அவர்களுக்கெல்லாம் நாங்கள் படிப்பு சொல்லித் தருகிறோம். சுகாதார முகாம், கண் சிகிச்சை முகாம் அமைத்து ஏழை மக்களுக்குக் கண் சிகிச்சை செய்து, மூக்குக் கண்ணாடியும் அளிக்கிறோம். வள்ளுவர் மன்றமும், நாயக்கன் பாளையம் ஊராட்சி ஒன்றியமும் சேர்ந்து மேற்கூறிய நல்ல காரியங்களைச் செய்கின்றன. ஆதிவாசிகளில் ஒருவர் ஊராட்சி ஒன்றியத்தின் அங்கத்தினராயிருக்கிறார்; ஆதிவாசிகளின் நலன்களில் அக்கறை காட்டுகிறார். விவசாய விவாதக் குழு ஒன்று அமைத்திருக்கிறோம். அதில் பல விவசாயிகள் பங்கு பெறுகிறார்கள். வானொலிக்கு நிறையக் கேள்விகள் எழுதி அனுப்புகிறோம். இவ்வூரிலிருந்து மூன்று மைல் தூரத்தில் ஸ்ரீ பாலமலை ரங்கநாதர் ஆலயம் இருக்கிறது. அங்கு மாதந்தோறும், ஐந்நூறு பேர்களுக்குக் குறையாமல் அன்னதானம் அளித்து வருகிறோம். பிரதிமாதமும் இலக்கியக் கூட்டம் நடத்துகிறோம்......''



■ வாசகசாலையில் பத்திரிகை படிக்கிறார்கள்.

■ விவசாயிகள் விவாதிக்கின்றனர்.

ராயருத்துபதி, மாங்குளி, பகமணி, பெரும்பதி, குஞ்சூர்பதி, பெருக்கப் பதி— இவையெல்லாம் என்ன தெரியுமா? கோவனூரை அடுத்த ஆதிவாசிகள் வாழும் ஊர்கள். பெயர்கள் நல்ல தமிழாயிருப்பதைக் கவனிக்க வேண்டும்.

வள்ளுவர் மன்றத்தின் அங்கத்தினர்கள் மொத்தம் இருபத்தைந்து பேர். தலைவர் அய்யாசாமி மன்றத்தைப் பற்றி ஒரே மூச்சில் விவரித்துவிட்டார். மன்றத்துக்குச் சொந்தமாக ஒரு கட்டடம் இருக்கிறது. அது கிராம மக்களின் ஒத்துழைப்புடன் வள்ளுவர் மன்ற அங்கத்தினர்களின் முயற்சியில் கட்டப்பட்டிருக்கிறது. மாலை ஐந்து மணியிலிருந்து இரவு இரண்டு மணி வரையில் கட்டட வேலை நடந்திருக்கிறது. இரண்டே மாதங்களில் முந்நூறு பேர் அமரக்கூடிய இந்த ஹால் கட்டி முடிக்கப்பட்டிருக்கிறது. வள்ளுவர் மன்றத்தின் கொள்கைகளையும், அந்தக் கொள்கைகளில் பற்றுள்ள அங்கத்தினர்களையும் பற்றித் தெரிந்து கொண்டால், இந்தக் கட்டட வேலை இவ்வளவு விரைவில் முடிந்ததைப் பற்றி யாருமே அதிசயப்பட மாட்டார்கள்.

வள்ளுவர் மன்றத்தைப் பற்றி எல்லாம் தெரிந்து கொண்டாகிவிட்டது என்றாலும் வழக்கமாகக் கேட்கும் கேள்வியைத் தலைவரிடம் கேட்டேன்:

''இன்னும் ஏதாவது சுவையான விஷயம் இருக்கிறதா?''

''ஆகா, இருக்கிறது. உள்ளே வாருங்கள்'' என்று கூறி அழைத்துச் சென்றார்கள். அமர்க்களமான விருந்து தயாராக இருந்தது!

'சுவையான விஷயம்' என்று மிகவும் அக்கறையோடு கேட்டுவிட்டு, சுவையான விஷயம் கிடைக்கும்போது பின்வாங்குவேனா? ஜமாய்த்து விட்டேன்! —ஸோமாஸ்





# உதவிக்கு வந்தவன்

பீஷ்மன்

சன்னலின் வழியாக வீசிய காலைக் காற்று கட்டிலில் உறங்கிக் கொண்டிருந்த நிர்மலாவின் முகத்தில் சில்லென்று அடித்து அவளுக்கு விழிப்பூட்டி விட்டது. கண்ணைக் கசக்கி விட்டுக் கொண்டு எழுந்திருந்தாள்.

மணி ஐந்தாகி இருந்தது.

வெளியே இன்னும் இருட்டு நன்றாகக் கலையவில்லை.

படுக்கையைச் சுருட்டி, கட்டிலின் கோடியில் தள்ளிவிட்டு எழுந்தாள் அவள்.

பக்கத்துக் கட்டிலில் மாதவன் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தான்.

'பகவானே! இன்றைய பொழுது நல்லபடியாக விடிய வேண்டும்!'

அவள் கண் விழித்ததும் பார்வையில் படும்படி சுவரில் மாட்டியிருந்த ஏழுமலையானிடம் அவள் மானசிகமாக வேண்டிக் கொண்டு நடந்தாள்.

மாதவனை அன்று காலை பத்து மணிக்கு வரச் சொல்லியிருந்தார் டாக்டர்.

கிட்டத்தட்ட மூன்று வருடங்களாக வயிற்று நோயினால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தான் அவன். சமீப காலமாக, பொறுக்க முடியாத வலி அடிக்கடி தோன்றி அவனை வதைக்க ஆரம்பித்திருந்தது. டாக்டர் ஞானகிராமிடம் போய்க் காட்டினான்.

ஒரு வாரம் என்னென்னவோ சோதனைகள் நடத்திய டாக்டர், வயிற்றில் ஒரு சின்ன ஆபரேஷன் செய்தால்தான் இந்த நோயைக் குணப்படுத்த முடியும் என்று கூறிவிட்டார்.

இன்று அவரது ஆஸ்பத்திரியில் 'இன் பேஷண்டாக அட்மிட்' செய்து கொள்ள வரச் சொல்லியிருந்தார் அவர்.

மணி ஏழாயிற்று.

மாதவன் கட்டிலில் புரண்டு படுத்துக் கொண்டான்.

"மணி ஏழாயிடுத்து. எழுந்திருங்கோன்னா!" என்று அவன் கட்டிலருகில் வந்து குரல் கொடுத்தாள் நிர்மலா.

'இவர் குளித்துச் சாப்பிட்டுவிட்டுக் கிளம்புவதற்குச் சரியாக இருக்கும்' என்று நினைத்துக் கொண்டே, எழுந்திருந்த அவன் பின்னால் நடந்தாள் அவள்.

வீட்டைவிட ஆஸ்பத்திரிச் சூழ்நிலையில் அவன் சற்று அமைதியாகக் காணப்பட்டான்.

ஆபரேஷன் தேதிக்கு இன்னும் இரண்டு நாட்கள் இருந்தன. அதுவரையில் வெறும் ஓய்வுதான்.

டாக்டர் ஞானகிராமின் அந்த ஆஸ்பத்திரியில் வசதிகளுக்குக் குறைச்சலில்லை. மாதவனுக்கென்று ஒரு தனி அறை ஒதுக்கப்பட்டிருந்தது. அவன் படுத்திருந்த கட்டிலைத் தவிர, அந்த அறையில் இரண்டு நாற்காலிகள், ஒரு சின்ன வலை பீரோ, அதன் மீது ஒரு பூக்கிண்ணம் – இவைதாம் இருந்தன. சின்ன அறைதான் என்றாலும் வசதியாக இருந்தது. சுவரில் அவன் பார்வை படும் இடத்தில் இந்த அறையிலும் ஓர் ஏழுமலையானின் படம் மாட்டப்பட்டிருந்தது. அதைப் பார்த்ததும் அவனுக்குச் சிரிப்பு வந்துவிட்டது.

"எதற்குச் சிரிக்கிறீர்கள்?" என்று கேட்டாள் நிர்மலா, பிளாஸ்கிலிருந்த காப்பியை டம்ளரில் ஊற்றிக் கொண்டே.

"நான் எங்கே போனாலும் ஏழுமலையானும் கூட வந்துவிடுகிறார், பார்த்தாயா....?"

புன்னகையுடன் அவன் கையில் காப்பி டம்ளரைக் கொடுத்தாள் அவள்.

"தெய்வம் எப்போதும் நம் பக்கத்தில் தான் இருக்கும்!"

காப்பியைக் கொஞ்சம் கொஞ்சமாகப் பருகிக்கொண்டே யோசனையுடன் அவள் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான் அவன். ஏழுமலையானின் முகத்தைப் பார்க்கும் போது இருந்த நிம்மதி மறைந்து போய் ஏதோ ஒரு சிறு கலக்கம் அவள் முகத்தில் நிழலாடுவதை அவன் கவனிக்கத் தவறவில்லை.

காப்பியைக் குடித்து முடித்துவிட்டு, காலி டம்ளரை அவள் கையில் கொடுத்தான்.

"இதோ பாருங்கள். தெய்வம் எப்போதும் நம் பக்கத்திலேதான் இருக்கிறது: இருக்கும். வீணாக எதற்கு இப்படிக் கவலையும், யோசனையும்......?"

"கவலைப்படவில்லை, நிர்மலா; வெறுமே நினைத்துப் பார்க்கிறேன், நடந்ததையெல்லாம். நினைப்பே கஷ்டமாக இருக்கிறது."

அவளைப் பார்த்து இப்படிச் சொல்லிவிட்டு, எதிரே இருக்கும் ஏழுமலையான் பக்கம் பார்வையைத் திருப்பிக் கொள்கிறான்.

"நிர்மலா, எனக்கு இந்தப் பழி வந்திருக்க வேண்டாம்!" என்று கூறி மறுபடியும் பெருமூச்செறிகிறான் அவன்.

"'சுடச் சுடரும் பொன் போல' என்று கேட்டதில்லையா....? இந்தப் பழிகூட உங்கள் நேர்மையை எல்லாருக்கும் விளங்க வைக்க வந்த சோதனையாகவே முடியப் போகிறது."

அவன் மௌனமாகக் கண்களை மூடிக் கொள்கிறான். முகத்திலே மட்டும் யோசனை நிழல் அப்படியே கவிந்திருக்கிறது.

எந்தவிதமான குற்றத்தையும் தெரிந்தோ தெரியாமலோ செய்யாததனால் நேர்மையின் நட்புறவுப் பலத்தைப் பெற்றிருந்த அவன் மீது யாரோ அபாண்டமான பழி சுமத்தியிருந்தார்கள்.

இலாகாவின் உபயோகத்துக்குத் தேவையான கருவிகளை வாங்க, பல்வேறு நிறுவனங்களிலிருந்தும் 'டெண்டர்'கள் கோரி, தரமுள்ளதும் குறைந்த விலைக்குக் கிடைப்பதுமான பொருள்களை எந்த நிறுவனத்திடம் வாங்கலாம் என்று தேர்ந்தெடுக்கும் பொறுப்பு அவனுக்கு இருந்தது. அந்த ஆண்டு தேர்ந்தெடுக்கப்பட்ட நிறுவனத்தினிடமிருந்து மாதவன் இரண்டாயிரம் ரூபாய் லஞ்சம் வாங்கியதாகக் குற்றம் சாட்டி லஞ்ச ஊழல் அதிகாரிக்கு, வேறு ஒரு நிறுவனத்தின் அதிபர் தெரிவித்திருந்தார். அதன் மீது தொடங்கிய விசாரணையின்போது தொடுக்கப்பட்ட சம்பந்தமற்றதும் விரசமானதுமான கேள்விக் கணைகள் அவன் மனத்தைக் குத்தித் துளைத்திருந்தன.

நோய் அவன் வயிற்றை ரணகளப்படுத்தியிருந்தது.

"வயிற்றுவலி இப்போ கொஞ்சம் தேவலை இல்லையா.......?"

"அதை நான் மறந்திருக்கிறேன்!" என்றான் அவன் கண்களைத் திறக்காமலேயே.

அவன் ஏன் அப்படிச் சொல்கிறான்? நிர்மலாவுக்கு வேதனையாக இருந்தது. அவனை மேலும் ஒன்றும் கேட்க விரும்பாமல் பிளாஸ்கைக் கழுவுவதற்காக எடுத்துக் கொண்டு அங்கிருந்து நடந்தாள்.

வீட்டுக்கும் ஆஸ்பத்திரிக்கும் அதிக தூரமில்லை. எனவே, அவள் வீட்டுக்கு வந்து சமைத்துச் சாப்பிட்டுவிட்டு, அவனுக்கு வேண்டியதை எடுத்துக் கொண்டு ஆஸ்பத்திரிக்குப் போய் வந்து கொண்டிருந்தாள்.

வீட்டுக்கு வந்து முகத்தைக் கழுவித் துடைத்துக்கொண்டு அர்ச்சனைக் குங்குமத்தை நெற்றியில் இட்டுக் கொண்டாள். சுவாமி படத்தின் முன் விளக்கேற்றி வைத்தாள்.

தெய்வம் அவள் பக்கம்தான் இருந்தது. ஆபரேஷன் முடிந்துவிட்டது. எந்தத் தொந்தரவும் இல்லை. ரணம் ஆறி அவன் தேறி எழுந்துவிட்டால் இந்த வயிற்று உபத்திரவம் இனி இருக்காது. டாக்டர் கூறிவிட்டார்.

"ஸிஸ்டர்...... !"

ரமா வந்தாள், கையை ஒரு டவலில் துடைத்துக் கொண்டே.

"நான் கொஞ்சம் வீட்டுக்குப் போய் வரணும். ஏதாவது வேணும்னு கவனிச்சுக்குங்கோ......!"

"நீங்க கவலைப்படாமல் போய் வாங்க அம்மா. இனிமேல் ஒரு பயமுமில்லே!"

"நிர்மலா....!" — அவன் கண் விழித்துவிட்டான். இவர்களுடைய பேச்சுக் குரல் அவனை எழுப்பிவிட்டது.

கைப் பையுடன் வீட்டுக்குப் புறப்படத் தயாராயிருந்த நிர்மலா அவனது கட்டிலருகில் போய் நின்றாள்.

"வீட்டுக்குப் புறப்பட்டாயா? போயிட்டு வா! சும்மாதான் கூப்பிட்டேன்."

"ஏதாவது வேணுமா ?"

அவள் குரலின் பரிவை ரசிக்கும் புன்னகையுடன் 'ஒன்றும் வேண்டாம்' எனத் தலையாட்டினான் அவன்.

"ஏதாவது வேணுமானு ரமாவைக் கூப்பிடுங்கோ! நான் இதோ வந்துடறேன்" என்று சொல்லிக் கொண்டு கிளம்பியவள், "வரேன்" என்று வாசற்படியருகில் போய் நின்று, அவனைத் திரும்பிப் பார்த்துச் சொல்லிவிட்டுத்தான் போனாள்.

மணி ஏழரை ஆகியிருந்தது.

எத்தனையோ உறவுக்காரர்கள் இருந்தபோதிலும் உதவிக்கு என்று கூப்பிட யாருமே இல்லை அவளுக்கு. அதைப் பற்றி அவள் கவலைப்பட்டதே இல்லை. ஆனால், இப்போதுதான் அந்தக் குறை அவள் மனத்தை உறுத்தியது. நெருங்கிய உறவாக யாராவது பெரியவர்கள் இருந்தால் இப்போது எவ்வளவு சௌகரியமாயிருக்கும் ?

இப்படி நினைத்துக் கொண்டே வீட்டுக் கதவைத் திறக்கையில் பின்னால், "நிர்மலா!" என்று குரல் கேட்டது. திரும்பினாள்.

ரங்கன் !

உறவுக்காரர்கள் இல்லையே என்று நினைக்கும் போதே, 'நான் இருக்கிறேன்' என்று வந்து நிற்கிறானே! அவனைப் பார்ப்பதற்கே அவளுக்கு எரிச்சலாக இருந்தது.

"மாதவனுக்கு உடம்பு சரியில்லையாமே? அம்மா சொன்னாள்! எப்பவுமே அவன் வயிற்று வலிக்காரன்தான் !"

அவள் ஒன்றும் பதில் சொல்லவில்லை. கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனால், பேசிக்கொண்டே அவனும் உள்ளே வந்துவிடப் போகிறானே என்ற பயத்தில் கதவைத் திறக்காமலேயே நின்று கொண்டிருந்தாள்.

"என்னவோ நல்லபடியாக ஆகணும். உன்னைப்பார்த்தால் பரிதாபமாக இருக்கு!"

அவள் அவனை எரித்துவிடுவதுபோல் பார்த்தாள். "இதோ பார் ரங்கா. பகவானின் பரிதாபம் ஒன்னு போதும் எனக்கு. வீணாக நீ ஏன் பரிதாபப்படணும்.....?"

"கோபிச்சுக்காதே, நிர்மலா! உங்கிட்டே ஒரு முக்கியமான விஷயம் சொல்லணும்னு வந்தேன். நீ இப்படிக் கோபிச்சுக்கறயே...."

"நானே வேதனைப்பட்டுக் கொண்டிருக்கிறேன். நீ வேறு எதையாவது பேசி என்னை வேதனைப்படுத்தாதே. உன் வழியைப் பார்த்துக் கொண்டு போய்ச் சேர் !"

"என்னைக் கண்டாலேதான் உனக்கு எரிச்சலா வருதே! நான் போறேன்....!" திரும்பித் திரும்பி அவளைப் பார்த்துக் கொண்டே தெருவில் நடந்தான் ரங்கன்.

அவன் போய்த் தொலைந்தானே என்ற நிம்மதியுடன் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனாள் அவள்.

ரங்கனுடைய அப்பா அவளுக்கு ஏதோ ஒரு தூரத்து உறவு. அதை வைத்துக் கொண்டு அவன் அவளிடம் எப்போதும் சொந்தம் கொண்டாடிக் கொண்டு வந்து பல்லை இளிப்பான். விதரணை இல்லாமல் அசட்டுப் பிசட்டென்று ஏதாவது பேசுவான்.

# ப்ரூ, பெரிதும் விரும்பப்படுவது ஏன்?

# "ப்ரூதான் ஸ்ட்ராங் தன்மை மற்றும் காபிச்சுவையுடன் மணத்தையும் பெற்றிருக்கிறது."




ப்ரூ-அதி நேர்த்தியான ஸ்ட்ராங்கான இன்ஸ்டண்ட் காபி-விலையும் எவரும் கொடுக்கக் கூடியது

**மின்சாரத்தால் திராட்சை பறிக்கலாம்!**

சோவியத் ரஷ்யாவில் சுலபமாகத் திராட்சை பறிக்கும் முறை ஒன்றைக் கண்டுபிடித்துள்ளனர்! திராட்சைப் பந்தல் கம்பிகளால் போடப்படுகிறது. டிராக்டர் திராட்சைக் கொடிகளின் அருகில் சென்று கம்பிப் பந்தலில் மின்சாரம் பாய்ச்சுகிறது. திராட்சையில் சர்க்கரைச் சத்து அதிகமாக உள்ளதால் அது மின்சாரத்தைக் கடத்தக் கூடிய சக்தி வாய்ந்தது. ஆனால் திராட்சைக் கொடி மின்சாரத்தைக் கடத்தாது. ஆகவே மின்சாரத்தைப் பாய்ச்சியதும் 'ஷார்ட் சர்க்யூட்' ஆகித் திராட்சைக் குலை தானே அறுந்து டிராக்டருக்குள் விழும்!

ஆதாரம்: 'சோவியத் யூனியன்' - சம்பத்குமாரி

அவனுக்கென்னவோ சின்ன வயசிலிருந்தே அவளைக் கண்டால் பிடிப்பதில்லை.

ஆனால்..... 'நிர்மலாவைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன்' என்று ஒற்றைக் காலில் நின்றானும் அவன். அவன் அம்மா வந்து சொன்னதாகத் தன்னுடைய அம்மா கூறியபோது, சற்றும் தாமதிக்காமல் தன் கோபத்தைக் கொட்டிவிட்டாள் நிர்மலா.

''அதைவிட என்னை எங்கேயாவது கிணற்றில் தள்ளிவிடம்மா !''

நிர்மலாவின் பெற்றோர்கள் அவள் விருப்பத்தை மதிக்கத் தெரிந்த பெற்றோர்கள். இல்லையென்றால்......?

நினைப்பதற்கே சங்கடமாக இருந்தது அவளுக்கு. ஆயினும், அவனுடைய கல்யாணத்தின் போது ஒரு சின்ன அமளியை ஏற்படுத்தி விட்டாள் ரங்கனின் அம்மா.

கல்யாணத்துக்கு முந்திய நாள் மத்தியானம்.

''மாப்பிள்ளைப் பையனுக்கு ஏதோ வியாதியாமே! அந்த வீட்டு மனுஷாளே பேசிக்கிறாளே! நீங்களாட்டுக்கு முன்னே பின்னே விசாரிக்காமல் இப்படி சம்பந்தத்திலே இறங்கிட்டேளே! விடிஞ்சால் முகூர்த்தம். இனி மேல் பேசி என்ன பிரயோசனம்! யாருக்கு எது பிராப்தமோ அப்படித்தானே நடக்கும்?''

ரங்கனின் அம்மா வீசிய அந்தச் சிறு குண்டு புகைந்து புகைந்து மாப்பிள்ளை வீட்டாரின் காதருகில் போய் வெடித்து விட்டது.

மாலை ஆறு மணி இருக்கும். மாதவனின் தாய் மாமா வந்து அப்பாவிடம் போட்ட கூச்சலில் கல்யாணவீடே கலகலத்து விட்டது.

''இங்கே யாரும் யாரையும் ஏமாத்தலே சுவாமி! மாதவனுக்கு அடிக்கடி வயிற்று உபத்திரவம் வரும்! உண்மைதான். இதை ஒரு பெரிய விஷயமா யாரும் நினைக்கலே; சொல்லலே. அவ்வளவுதான். இப்பக்கூடக் கல்யாணத்தை நிறுத்திடலாம். வீணா எதையாவது சந்தேகப்பட்டு யார் யாரோ வாய்க்கு வந்ததைப் பேசினால் எப்படி?''

இரு தரப்பிலும் பேச்சு வார்த்தைகள் உரக்க மோதி அடங்குவதற்குள்....

நிர்மலாதான் தவித்துவிட்டாள். நல்லபடியாகக் கல்யாணமும் நடந்து விட்டது.

ஆபரேஷன் செய்தால்தான் குணமாகும் என்று டாக்டர் சொன்னதிலிருந்து ஆபரேஷன் ஆகி முடியும் வரை, கல்யாணத்தன்று நடந்த கலாட்டாவும் ரங்கனின் அம்மாவின் பேச்சும் அவள் மனத்தில் மோதி மோதி அவளைப் பயமுறுத்திக் கொண்டிருந்தன.

இன்றுதான் அவள் நிம்மதியாக மூச்சு விடுகிறாள்.

சுவாமிக்கு நைவேத்தியம் செய்த பாயசத்தில் கொஞ்சம்போல ஒரு டப்பாவில் எடுத்துக் கொண்டாள்.

மாதவனுக்குப் பாயசம் என்றால் உயிர்.

நர்ஸிங்ஹோமுக்கு அவள் போய்ச் சேரும் பொழுது பத்து மணி ஆகிவிட்டது.

'அவர் அறையில் ஏன் இத்தனை பேர் நிற்கிறார்கள் ?'

'என்ன நடந்துவிட்டது...? ரங்கன் வேறு இங்கே நிற்கிறானே.....!'

அவளுக்கு நெஞ்சு வேகமாக அடித்துக் கொண்டது. உடம்பெல்லாம் வியர்த்துக் கொட்டியது. அவள் வருவதறிந்து டாக்டர்கள் விலகி அவளுக்கு வழி விட்டனர்.

கட்டிலில் மாதவன் கண்களை மூடிக் கொண்டு படுத்திருந்தான். அங்கு நிலவிய நிசர் அமைதி அவளை ஓங்கி அறைந்தது.

''ஸிஸ்டர்.....!'' என்று கூவிக்கொண்டு கட்டிலில் விழுந்தாள்.

ஸிஸ்டர் ரமா வந்து அவளைப் பிடித்துக் கொண்டாள். ''நீங்க போன கொஞ்ச நேரத்துக்கெல்லாம் இந்த ஆளு வந்து என்னவோ பேசிக் கிட்டிருந்தாரம்மா.....! இவர்னு.... 'அப்படியா அப்படியா'ன்னு கேட்டுக்கிட்டே கட்டில்லே சாஞ்சுட்டாரம்மா.''

பின்னால் யாரோ விக்கி விக்கி அழுவது கேட்டது. பரிதாபமாக அவள் திரும்பிப் பார்த்தாள்.

அங்கே ரங்கன் அழுது கொண்டு நின்றான்.

நடந்திருப்பதற்கு அவன்தான் காரணமாக இருக்க வேண்டும் !

''இங்கே எதற்கு வந்தாய் ரங்கா? அவரை என்ன செய்தாய் சொல்லு...!'' அது நர்ஸிங் ஹோம் என்பதைக்கூட மறந்து அவள் கத்திவிட்டாள்.

நர்ஸ் பிடித்துக் கொண்டிரா விட்டால் அவன் அவளை அறைந்திருப்பாள் என்று தோன்றியது. ஆவேசத்தில் அவள் உடம்பு ஆடிக் கொண்டிருந்தது.

''ஆபீஸிலே இவர் பேரிலே யாரோ பழி சுமத்திக் கேஸ் நடந்துக்கிட்டு இருந்ததாமே! அதிலே இவர் ஒரு குற்றமும் செய்யலேன்னு முடிவாயிடுத்தாம் நிர்மலா! இதை ஆபீஸ் மானேஜர் சொன்னார் — காலையிலே! உன் கிட்டச் சொல்லணும்னு வந்தப்போ, நீ காது கொடுத்துக் கேட்காம என்னை விரட்டிட்டியே! அதனாலே இங்கே வந்து இவர் கிட்டே சொன்னேன் நிர்மலா! சந்தோஷப்படுவாரேன்னு நினைச்சேன்...!''

அழுது கொண்டே அசடு வழிய நின்றான் ரங்கன்.

''சந்தோஷம்னாலும் அதிர்ச்சியைத் தாங்க முடியல்லே!'' என்று யாரோ சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

''தெரிஞ்சோ தெரியாமலோ என் வாழ்க்கையைப் பாழாக்கிட்டியே ரங்கா...! உன் அசட்டுத்தனத்துக்குப் பயந்துதானே...''

அவளுக்கு மூர்ச்சையாகி விட்டது.

தன் தவறு புரியாமல் ரங்கன் அழுது கொண்டு நின்றான்.

# மவுசுள்ள ஆட்டம் மட்டில்லா! ஆர்ப்பாட்டம்!



"கால்பந்தாட்டத்துக்கு இத்தனை மவுசா ? இறுதி ஆட்டத்துக்கு இருபதினாயிரம், இருபத்தையாயிரம் மக்கள் கூடுகிறார்களே!'' என்று அதிசயித்தார் முதன் முதலில் கால் பந்தாட்டத்துக்கு விஜயம் செய்த பிரமுகர்.

''ஐயா! இது 'மாஸ் கேம்'. பந்தோடு ரஸிகர்களும் குதிக்கிறார்கள் ; சொல்லாடுகிறார்கள். பாரும் !''

விட்டல் கோப்பைப் பந்தயத்தில் ரசிகர்களின் உற்சாகம் உண்மையில் கரை புரண்டு ஓடிக் கொண்டிருந்தது.

இறுதி ஆட்டத்துக்காக வெண்ணிற ஆடையில் ஸ்டேட் பாங்க் ஆட்டக் குழுவினரும் பச்சை உடையில் தென்னிந்திய ரயில்வே ஆட்டக்காரரும் மைதானத்தில் இறங்கினார்கள்.

''ஏய் கசமாலம்! சரியாய்ப் பார்த்து ஆடு. மூர்மார்க்கெட் கமால் வேலை காட்டாதே!''

''ஏய், இடிக்காதே ! ஒழுங்காக ஆடு!''

''ஆளுக்கு ஒரு விசில் வைச்சுக்குங்க. கீபரியா மாறி ஊதலாம்!''

''சொல்லடி பொறுத்துக்கலாம், கல்லடி பொறுக்க முடியாது, ஐயா!'' என்று லைன்ஸ்மன் பழனிவேலு இடம் மாறினார்.

''ஸ்டேட் பாங்கிலே ஜான்சன் அடிபட்டுட்டாரு. அவரு இருந்தா ஒரு கை பார்த்திருப்பாரு !''

முதல் லெக் ஆட்டம் வெற்றி தோல்வி இன்றி முடிந்தது.

ஞாயிற்றுக்கிழமை இரண்டாம் 'லெக்' ஆட்டத்தைக் காணவும் திரளாக மக்கள் கூடினார்கள். இடைவேளை வரை தென்னிந்திய ரயில்வே குழு பல 'சான்ஸ்'களை இழந்தது.

''ஆட்டம் போகிற போக்கைப் பார்த்தா இன்றைக்கும் ஒரு 'டிரா' போலிருக்கே!''

தென்னிந்திய ரயில்வே குழுவில் ராஜேந்திரன் அடித்த பந்தினைத் தங்கப்பன் தலையினால் கோல் முகத்தில் தள்ளிவிடவே தலையில் வைத்துக் கொண்டாடப்பட்டார். சில கணங்களிலேயே அவரை மூட்டி மோதிப் படுக்க வைத்துவிட்டார்கள் !

''போகட்டும்! ஆட்டம் டிரா ஆகாது! இன்றே முடிஞ்சுடும்!''

''போல்! வாயைத் திறக்காதே, ஐயா! ஸ்டேட் பாங்க் குழு கோல் போட்டுச் சமன் செய்துவிட்டது!''

எக்ஸ்ட்ரா நேரம் இருவருக்கும் ஐந்து ஐந்து நிமிஷம் ஆட ஒதுக்கப்பட்டது. 'இந்தக் குறைந்த நேரத்தில் என்ன முடிவு ஏற்படும்?' என்று ரஸிகர்களும் அலுத்துக் கொண்டிருந்தபோது ஆட்டம் முடியும் தருணம் அபாரமான கோலைப் போட்டு ரயில்வே அருமை நாயகம் ஆட்டத்துக்கு அருமையான முடிவு கண்டார்! அருமைநாயகம் 1962 ஜாகர்த்தாவிலும் 1966 பாங்காக்கிலும் நடைபெற்ற ஆசிய கால் பந்தாட்டப் போட்டிகளில் கலந்து கொண்டவர். 'பௌல்' இழைக்காத ஒரு நல்ல ஆட்டக்காரர் !

தலையாலே 'கோல்' கண்ட தங்கப்பன் கேரள ராஜ்யத்தில் கோட்டயத்தில் பிறந்தவர். ரயில்வே கோஷ்டிக்காக 1964ல் தேசிய கோப்பைப் பந்தயத்தில் கலந்து கொண்டு 'சந்தோஷ் கோப்பை' பெற ஆடிய பெருமை இவருக்கு உண்டு. — பி. எஸ். எம்.

1—4 ரயில்வே அணி; 5. ஸ்டேட் பாங்க் ஆட்டக்காரர்.



# ஊதுபத்தியின் வேதனை

'ஜகன்'



சுவாமிநாதன் இன்று 'ரிடையர்' ஆகப் போகிறார். முப்பத்தெட்டு கால ஆசிரியப் பணியிலிருந்து விலகப் போகிறார். இல்லை, இல்லை. அரசு, 'நீங்கள் உழைத்து உருக் குலைந்தது போதும், ஓய்வு பெறுங்கள்' என்று அன்பாகக் கட்டளையிட்டது. தான் தேய்ந்து பிறரை உயர்த்திவிட்ட அந்தச் 'சந்தன மரம்' ஆசிரியப் பணியிலிருந்து விலகப் போகிறது!

பழமையின் இலக்கணமாக டர்பன் கட்டிப் பஞ்சகச்சம் பூண்டு நெற்றியிலே சந்தனமும் விபூதியும், செந்தூரமும் கலந்து அவர் வகுப்பில் நுழைந்தால் வகுப்பே தெய்வ மணம் கமழும், ஏன், பள்ளியே தெய்வ மணம் கமழும் என்று சொன்னால் கூட மிகையில்லை.

பள்ளி ஒரு நல்ல ஆசானை, பண்பட்ட பக்த சீலரை இழக்கப் போகிறது.

இரவு மணி பன்னிரண்டு. சுவாமிநாதனுக்கு உறக்கமே பிடிக்கவில்லை.

நாளை முதல் அவர் பள்ளிக்குப் போகப் போவதில்லை. மனைவியாவது இருக்கிறாளா? பேச்சுத் துணைக்கு, இல்லையே! அந்தப் பாக்கியவதி இறைவனடி சேர்ந்து பதினைந்து வருடங்கள் காட்டாற்று வெள்ளமாக ஓடிவிட்டது. மகள் ஒருத்தி இருக்கிறாள், பானு என்று பெயர். பெங்களூரில் கல்யாணமாகி அங்கே அவளது கணவனுடன் இருக்கிறாள். மகன் ஒருவன் ராமு என்று பெயர். அவனுக்கும் கல்யாணமாகி ஒரு தகப்பனும் ஆகிவிட்டான். அவனுக்குப் பட்டணத்திலே வேலை. படாடோபமான வாழ்க்கை.

சொந்தம் இருந்தும் அவர் ஓர் அநாதை. அப்படித்தான் சுவாமிநாதன் நினைத்தார்.

நினைவுகள் விழுங்க அவர் உறங்கினார். பரக்கப் பரக்கக் காலையில் எழுந்து கொண்டார், பழைய நினைவுகளில் ஊறியவராக. பிறகு தம்மைச் சுதாரித்துக் கொண்டார். 'நான்தான் நேற்றோடு 'ரிடையர்ட்' ஆகிவிட்டேனே!' என்று சொல்லிக் கொண்டார்.

காலைக் கதிரவன் தகித்துக் கொண்டிருந்தான். சுவாமிநாதன் 'ஹிந்து' பத்திரிகையின் 'வாண்டட்' காலத்தை அலசி ஆராய்ந்தார். யாராவது 'ரிடையர்ட்' ஆன ஜீவன்களைக்

காப்பாற்றாமல் விட்டுவிடவா போகிறார்கள் என்ற நம்பிக்கையில்.

சுவாமிநாதன் வேலை பார்க்க வேண்டாம். பென்ஷனும் வைப்பு நிதியும் போதும். பற்றாததற்கு வங்கியில் பணமும் இருக்கிறது. அவர் உயிர் விடும்வரை போதும். ஆனால் கூடவே சோம்பேறித்தனமும் வளர்ந்துவிடும். அதற்குப் பயந்தார்.

சுவாமிநாதன் பட்டணம் புறப்பட ஆயத்தமானார். அவரது சக ஆசிரியர்கள் விழிகளில் நீரைக் கூட்டிப் பிரியாவிடை கொடுத்து அனுப்பினார்கள்.

தன் மகன் ராமுவின் வீட்டுக்குச் சென்றார்.

''அப்பா! நானே உங்களைப் பார்க்க வர வேண்டும் என்றிருந்தேன்'' என்றான்.

''அதான் நானே வந்துவிட்டேனே!''

இரண்டு நாட்கள் சென்றன.

''டே ராமு, நீ வேலை பார்க்கும் இடத்தில் எனக்கும் சிபாரிசு செய்து வேலை வாங்கித் தா. சம்பளம் இவ்வளவுதான் வேணும்னு கேட்கவில்லே. கொடுக்கிறதைக் கொடுக்கட்டும்'' என்றார்.

''நல்லா இருக்கப்பா நீங்க பேசறது! பேசாமல் என்னோட இருங்க. நான் சம்பாதிக்கிறது போதும். நீங்க வேலை செய்து சாப்பிடணும்னு என்ன தலையெழுத்தா? மேலும் எங்க கம்பெனியிலே என் சிபாரிசு அவ்வளவு தூரம் செல்லாது. வேலையும் காலி இல்லே'' என்றான் ராமு.

தாம் வேலை பார்த்தால் மகனின் கௌரவம் பாதிக்கப்படும் என்று ராமு நினைக்கிறான் போலிருக்கிறது என்று எண்ணிக் கொண்டார் சாமிநாதன்.

அவரே கம்பெனிகளில் ஏறி இறங்க ஆரம்பித்தார்.

நந்தகோபால் சுவாமிநாதனைக் கண்டதும் எழுந்து கொண்டான். ''என்னைத் தெரியவில்லையா சார்! நான் கணபதிபுரத்திலே உங்க 'மாணவன்'. இன்று இந்தக் கம்பெனியிலே நான் 'ஜி. எம்.' ஆக இருக்கிறேன் என்று சொன்னால் நீங்கள் எனக்கு அளித்த அறிவுப் பிச்சைதான் காரணம்'' — அவன் அப்படிச் சொன்னதும் சுவாமிநாதன் உள்ளம் நெகிழ்ந்தார். தம்மிடம் படித்த ஒரு மாணவன் ஒரு கம்பெனியைக் கட்டிக் காக்கிறான் என்று பெருமையடைந்தார். அவன் அப்படிப் பணிவுடன் சொன்னதும் சுவாமிநாதன் வெட்கத்தாலோ அல்லது புகழ்ச்சியாலோ கூனிக் குறுகினார். தாம் வேலை தேடி வந்திருப்பதை அவனிடம் கூற முடியாமல் திரும்பினார்.

எப்படியோ அங்கு இங்கு அலைந்து கடைசியில் ஒரு ஜவுளிக் கடையில் கணக்கராக வேலையில் அமர்ந்தார். அப்போது அவர் முகத்தில் இருந்த களையே அழகாக இருந்தது.

ஒரு நாள் இரவு. ராமுவும் மனைவி, குழந்தையும் சினிமாவுக்குச் சென்றிருந்தார்கள்.

'தடதட' வெனக் கதவைத் தட்டும் சத்தம் எழுந்தது. கதவைத் திறந்தார் சுவாமிநாதன். ஒருவன் உள்ளே ஓடிவந்து அவனே கதவையும் தாழிட்டான். பின்பு அவர் காலில் சடாரென்று விழுந்தான்.

''ஐயா, என்னைக் காப்பாத்துங்க.''

''விஷயம் என்ன சொல்லு. முடிந்தால் உதவி செய்யறேன்.''

அவன் சொன்னான்:

''ஒருத்தர் பஸ் ஸ்டாப்பில் நின்னுகிட்டு இருந்தார். எனக்குப் பசி; வீட்டிலே இருக்கும் குழந்தையின் பசி: கர்ப்பிணியான எனது மனைவியின் நிலை — எல்லாம் என் சிந்தையைத் தடுமாறச் செய்துச்சு. ஸ்டாப்பிங்கில் நின்னுக்

கிட்டிருந்தவரின் பர்ஸைத் திருடிட்டேன். எனக்கு அதுக்கு முன்னாலே பழக்கம் கிடையாது. அதனாலே அகப்பட்டுக் கொண்டேன். அவர் பிடியிலிருந்து திமிறி ஓடி வந்தேன். நான் இவ்வளவு நாளாகக் கட்டிக் காத்த மானம் பறிபோயிடுச்சு, ஐயா. என்னை அவர் துரத்திக்கிட்டு வரார். இந்தாங்க அவர் பர்ஸை நீங்களே அவரிடம் கொடுத்திடுங்க. என்னை மன்னிச்சிடச் சொல்லுங்க...''

அவனுடைய அவல நிலையைக் கேட்டுச் சுவாமிநாதன் பரிதாபப்பட்டார். அவருடைய இரக்க உள்ளம் அழுதது. இருந்தாலும் திருடியது குற்றம்தானே என்று அவருடைய ஆசிரிய உள்ளம் உறுத்தியது.

கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. பர்ஸைப் பறிகொடுத்தவன் வருகிறான் என்பதைப் புரிந்து கொண்டார். ''இந்தாப்பா, நீ இந்த இருபது ரூபாயை வைச்சுக்கோ'' என்று பீரோவிலிருந்து எடுத்துக் கொடுத்தார். பின்பு அவனைப் பீரோவுக்குப் பின்புறம் இருக்கச் சொல்லிவிட்டுக் கதவைத் திறந்தார்.

வாசலில் 'டிப் டாப்'பாக ஆடையணிந்த நவநாகரிக இளைஞன் கோபம் தாண்டவமாட நின்று கொண்டிருந்தான்.

''என்ன வேண்டும் உங்களுக்கு?'' என்றார் சுவாமிநாதன்.

''இந்தப் பக்கம், அதான் உங்கள் வீட்டில் யாராவது நுழைந்தானா?''

''ஏன்?''

''என்னுடைய பர்ஸ் பறிபோய்விட்டது.''

''இதன் சொந்தக்காரரா நீங்கள்?'' என்று அவன் பர்ஸைக் காண்பித்துக் கேட்டார்.

அவன் கோபம் சற்றுத் தணிந்தது போல் இருந்தது.

''பணமெல்லாம் சரியா இருக்கா பாருங்க'' என்றார்.

அவன் உடனே பணத்தைப் பார்க்கவில்லை. மாறாகச் சுவாமிநாதனின் உருவத்தையே பார்த்துக்கொண்டிருந்தான்.

''என்ன வேண்டும்?''

''அதே குரல்! நான் கேட்டுக் கேட்டுப் புனிதமடைந்த அதே குரல்...'' அவன் முணுமுணுத்தான்.

''என்ன சொல்கிறீர்கள்?''

''நீங்கள் கணபதிபுரம் சுவாமிநாதன் தானே? ஆசிரியர் சுவாமிநாதன்தானே?'' வியப்பில், சந்தோஷ மிகுதியில் அவன் ஏதேதோ சொன்னான்.

''ஆமாம், கணபதிபுரம்தான்; ஆசிரியர் தான்.''

''ஸார் என்னைத் தெரியல்லையா? நான், சுந்தரம் ஸார். உங்க மாணவன்'' என்றான்.

சுவாமிநாதனும் வியப்பால் விழியை உயர்த்தினார். இருக்கலாம். யாரைத்தான் நினைவில் வைத்துக் கொள்ள முடியும்?

அவன் போய்விட்டான். திருடியவனைப் பற்றி எதுவும் கேட்காமல், தன் பொருளும் கிடைத்து, தன் ஆசிரியரையும் சந்தித்தோம் என்ற களிப்பில் போய்விட்டான்.

''அவன் போய்விட்டான். நீ வெளியே வா'' என்றார். அவன் வரவில்லை.

சுவாமிநாதன் அவனுக்குக் கொடுத்த ரூபாய் கீழே சிரித்துக் கொண்டிருப்பதைக் கண்டார். எடுத்து மீண்டும் அதைப் பீரோவில் வைத்தார்.

இரவு கழன்று இரண்டு நாட்களும் ஓடி விட்ட காலை. தபால்காரர் வரும் நேரம்.

அவருக்குக் கடிதம் வந்தது.

''அன்புமிக்க ஆசிரியருக்கு,

வணக்கம் பல. என்னைத் தங்களுக்கு யாரென்று தெரியாது. காரணம் என்னை இருட்டில் சந்தித்தீர்கள். எனக்கும் தங்களை முதலில் யாரென்று தெரியவில்லை. என்னுடைய பெயர் கணேஷ். நேற்று ஒரு நபரிடம் மணிபர்ஸைத் திருடிய பாவி. அவர் பேச்சிலிருந்து தங்களை யாரென்று புரிந்து கொண்டேன். நானும் தங்கள் மாணவன் என்று சொல்லிக்கொள்ள வெட்கப்படுகிறேன். ஆகையால்தான் தங்களிடம் சொல்லிக் கொள்ளாமலேயே கொல்லைப்புறமாகச் சென்று விட்டேன். தங்களிடமே பணம் வாங்கிய பாவத்துக்கு மன்னிக்கவும். உங்கள் பணத்தைத் தொடக் கூட யோக்கியதை கிடையாது என்று கருதியே போட்டுவிட்டு வந்தேன். இனி திருந்தியவனாக உங்களைச் சந்திப்பேன்.

தங்களை மறவாத **கணேஷ்.**

மூன்று நாட்கள் ஓடின.

போலீஸ் அதிகாரிகள் மற்றும் இரு அதிகாரிகள் சுவாமிநாதன் வீட்டுக்கு வந்தார்கள்.

சுவாமிநாதன் சாப்பிட்டுவிட்டு அறையில் சோபாவில் சாய்ந்தவாறு பேப்பர் படித்துக் கொண்டிருந்தார். ராமு சாப்பிட்டுக் கை கழுவிக் கொண்டிருந்தான்.

ராமுவின் மனைவி திடுக்கிட்டவளாகச் சுவாமிநாதனை அழைத்தாள்.

சுவாமிநாதன் வெளியே வந்தார்.

''சார், இந்த வீட்டிலேதானே ராமு என்பவர் இருக்கிறார்'' என்றார் போலீஸ் அதிகாரி.

''ஆமாம்.''

''இந்த வீட்டைச் சோதனை போட வேண்டும். ராமு என்பவர் கள்ளக் கடத்தல் வியாபாரம் செய்து கொண்டிருப்பதாகச் செய்தி. இதோ வாரண்ட். அவரைக் கைது செய்ய வேண்டும்'' என்ற அதிகாரி சோதனையைத் தொடர்ந்தார்.

ராமு கைது செய்யப்பட்டான்! குற்றத்தை அவன் ஒப்புக் கொண்டான்.

சுவாமிநாதன் நிலைகுலைந்து போனார். தம் மகன் ராமு இதுவரை செய்த வேலை இது தானா? எவ்வளவு பெரிய தேசத் துரோகக் குற்றம் செய்துவிட்டான்? வெம்பிப்போனார்.

தன்னை அழித்துக் கொண்டு பிறருக்குப் பயனாக இருந்த ஊதுபத்தி மிகவும் வேதனைப் பட்டது. ஊருக்கே நல்லவர் என்றும், சிறந்த ஆசான் என்றும் நற்சான்றிதழ் பெற்ற அவர் தம் மகனைத் திருத்தத் தவறிவிட்டாரா?

ஊரில் எவ்வளவோ பேர்கள், அவர் கண்ணெதிரிலேயே பெரிய அதிகாரியாகவும், தேச சேவை செய்பவர்களாகவும் திகழ்கிறார்களே! அவர்களை உயர்த்தி விட்டதற்கு அவர்தான் பொறுப்பு என்றால் தம் மகனை இந்த நிலைக்குக் கொண்டு வந்ததற்கும் அவர் தானே பொறுப்பு!


அஞ்சுகம் பிக்சர்ஸ்
அளிக்கும்...
கலைஞர் எழுதிய
பிள்ளையோ பிள்ளை
இயக்குநர்
கிருஷ்ணன் பஞ்சு
சென்னை...
பிளாசா
பிராட்வே
மகாலட்சுமி
நூர்ஜஹான்
இப்பொழுது
நடைபெறுகிறது!

# அம்மா

ரா. கணபதி

## 38. சென்னையில் அன்னை

ஆயிரக்கணக்கான மக்கள் நீண்ட காலமாக வழிபட்டுப் பிரார்த்தனையும், தவமும், ஜபமும், தியானமும் செய்த க்ஷேத்திரங்களில் அந்த ஆத்மிக எண்ணங்களே உருக்கொண்டு விடுமாதலால், அங்கு ஈசுவர சாந்நித்யம் நிறைய இருக்கும் என்பதைப் புரிந்து கொள். புராதன காலந்தொட்டு, எண்ணிலா அடியார்கள் இந்த க்ஷேத்திரங்களுக்கு வந்து உள்ளார்ந்த பக்தியோடு கதறியிருக்கிறார்கள். ஆகையால் எங்கும் இருக்கும் ஈசுவரன் இங்கெல்லாம் தன்னை விசேஷமாகத் தோற்றுவித்திருப்பதை உணரலாம். பூமியின் அடியில் எங்குமே நீர் ஓடினாலும், நமக்கு நீர் வேண்டியபோது உடனே எடுத்துக் குடிக்கக் கிணறும் குளமும் இருப்பது போல், எங்கும் உள்ள இறைவனை நாம் எளிதில் உணர க்ஷேத்திரங்கள் உள்ளன.

**- பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்**

1910ம் ஆண்டு இறுதி. கிருஷ்ண பாமினி தேவி அம்மாவையும், அவளது பெரிய கோஷ்டியையும் ஒரிஸ்ஸாவில் கோதார் என்ற ஊரில் இருந்த தனது எஸ்டேட்டுக்கு அழைத்துச் சென்று உபசரணை செய்தாள்.

கோதார் வாசத்தின்போது ஓர் அற்புத சம்பவம் நிகழ்ந்தது. அம்மாவுக்கு வந்திருந்த கடிதங்களைப் படித்துச் சொல்வதற்காகப் பாரிஷதர் ஒருவர், பகலில் அவள் போஜனம் செய்துவிட்டுச் சிரம பரிகாரம் செய்து கொள்கையில் அவளிடம் சென்றார். அம்மா காலை நீட்டிக்கொண்டு ஆகாயத்தைப் பார்த்தபடி அமர்ந்திருந்தாள். அவளது பார்வைக்குள்ளும் ஓர் ஆகாயம் இருந்தது. கால்மணி நேரத்துக்கு மேலாகியும் ஆடாமல் அசையாமல் அப்படியே இருந்தாள். பாரிஷதர் கனைத்துக் கொண்டார். அம்மா மோனம் கலைந்து அவரைத் திரும்பிப் பார்த்தாள். அவன் நினைவு எங்கோ உயிரோடிற்று. பூமிக்கு அடியே ஓடுகிற நீர்ச் சுனையின் நாதம் மேல் நிலத்தில் காதை வைத்துக் கொண்டவருக்குக் குமுகுமுப்பது போல் அம்மாவிடமிருந்து வார்த்தைகள் வெளிப்பட்டன. ''மறுபடி மறுபடி பூமிக்கு வந்துண்டே இருக்க வேண்டியிருக்கு. சிவனும் சக்தியும் சேர்ந்து சேர்ந்து வரா. இதிலேயிருந்து தப்பவே முடியாது. ஆமாம். ஆனா ஜனங்களுக்கு எங்கே புரியறது? புரிஞ்சாலும் புரியாட்டாலும் ஜனங்களெல்லாம் டாகூரோட சொந்தச் சொத்து. அதுக்காகத்தான் மறுபடி மறுபடி வரவேண்டியிருக்கு. சொத்து மட்டும்தானா? அவரே தானே எல்லாமும்? குருடன், நொண்டி எல்லாரும் கூட அவர்தான். யார் படுகிற கஷ்டத்தைப் பார்த்தாலும் அவர் கஷ்டப்படறார்னுதான் தோணறது. அதைப் பார்க்கறச்சேதான், அவர் கஷ்டத்தைப் பங்கு போட்டுக்கணும்னு துடிச்சுண்டு நானும் கூட வரேன். எல்லையில்லாத அன்பிலே இருதயத்தை முழுக்கிண்டு கஷ்டத்தை வாங்கிக்கறேன். தூக்கம், சாப்பாடு, சௌகரியம் இதெல்லாம் துச்சமாப் போயிடறது. எல்லாரும் ஓய்வு எடுத்துக்கறா. எனக்கு ஓய்ச்சல் ஒழிவே கிடையாது..... அவருக்கும் தான். தினம் தினம் அதே சூரியன் வர மாதிரி, அவரேதான் அத்தனை அவதாரத்திலேயும் வந்திருக்கார். நன்னா சிக்கிண்டாச்சே, எப்படித் தப்பறது? மனுஷனைப் பார்த்துக் கவி பாடினார் :

ஜன்மம் போனால் பின்னொரு ஜன்மம்
துன்பம் கன்மம் தொடரும் வன்மம்
இன்னலை நீக்கி இன்பம் தேகிட
இன்னமும் வழிநீ கண்டிலை அந்தோ!



''மநுஷா மட்டும்தானா? டாகூருக்கும் இதே அவஸ்தைதான். அவர் படற அவதி யாருக்குத் தெரியும்?''

அம்மாவின் பனித்த நயனங்களி லிருந்து முத்து முத்தாக நீர் உருண்டது.

'சிவனும் சக்தியும் சேர்ந்து வருவ தாக அம்மா சொன்னாள். சிவன் போன பின்பும் இந்தச் சக்தியே அல் லவா அவதிப்படுகிறாள்?' என்று எண் ணிய அந்தத் தொண்டர், ''டாகூரை மட்டும் சொல்றேளே, உங்க துயரத்தைச் சொல்லுங்கோ'' என்றார்.

சிவன் வேறெங்கும் போகவில்லை, இந்தச் சக்தியுள்ளேயேதான் போயிருக் கிறார் என்று அந்தக் குழந்தை உண ராததைக் கண்டாள் தேவி. உடனே தன் மனத்தை இந்த உலகுக்கு இறக்கிக் கொண்டு, ''அசடு! அவரைச் சொல்லிட்டுப் போயும் போயும் என்னை யும் அவரோடு சேர்த்துப் பேசறதாவது? நான் அவரோட சரணதாஸி, அவ்வளவு தான். 'அமீ யந்த்ர, துமீ யந்த்ரீ'ன்னு (நான் வெறும் கருவி; நீயே அதை இயக்கும் சக்தி) வசனம் சொல்வாளே, நீ கேட்டதில்லை?'' என்றாள்.

இதே வசனத்தை ராமகிருஷ்ணர் காளியிடம், அதாவது சாரதையிடம் சொல்வதுண்டு. சிவனைத்தான் சக்தி இயக்கி, வைக்கிறது என்பது உலகப் பிரசித்தம்!

ராதா சியாமன் ஆலயத்தில் மணி முழங்கியது. ''என்ன, சாயரட்சையா ஆயிடுத்து! சரி, கடிதாசுகள் படி'' என்றாள் அம்மா கிங்கரரிடம்.

கிருஷ்ண பாவினிக்கு ஓர் அற்புத ஆசை எழுந்தது. அது தமிழகம் செய்த பாக்கியம்! ''அம்மா! இங்கேயிருந்தே ராமேசுவரத்துக்கு யாத்திரை போய் வரலாமே'' என்றாள்.

அதைக் கேட்டதும் அம்மா துள்ளிக் குதித்தாள். ''நிச்சயமாப் போகலாம். என் மாமனார் ராமேசுவரம் போயிட்டு வந்தவர் தெரியுமோ? இப்போ மாதிரி சௌகரியமா ரயில் இல்லாத காலத்திலே நடந்தே போயிட்டு வந்தார். ஒரு வருஷம் ஆச்சாம் அவர் திரும்பறத்துக்கு. சேது பந்தத்திலேயிருந்து பாணலிங் கம் கொண்டு வந்தார். இப்பவும் எங்காத்துப் பூஜையிலே இருக்கு. அவர் திரும்பி வந்தவிட்டுப் பிறந்த தாலேதான் என் மச்சினருக்கு ராமேசு வர்னு பேரு. எனக்கும் ரொம்ப சந் தோஷம் அங்கே போறதிலே'' என்று கூறினாள்.

இப்போது பெரிதாகப் பிரகடனம் செய்யப்படும் தேசிய ஒருமைப்பாட்டை அப்போது காசியும் ராமேசுவரமும் மௌனமாகச் சாதித்து வந்தன!

இரண்டாம் வகுப்பு ரயில் பெட்டி யில் அமர்ந்து அம்மா காட்சிகளைப் பார்த்துக் கொண்டு வந்தாள்.

விசாகப்பட்டினத்தில் ஒரு நாள் ஓய்வு கொண்டனர். குன்றின் மீதிருந்து அந் தத் துறைமுகப்பட்டினத்தைப் பார்த்து' ''சித்திரத்தில் எழுதினாப்பலே இருக்கு'' என்று வியந்தாள் தேவி.

அடுத்த நாள் நண்பகலில் சென்னை சென்டிரல் ஸ்டேஷனுக்குள் 'அன்னையை ஏற்றி வந்திருக்கிறேன்' என்று கூவிக் கொண்டே நுழைந்தது ஹவ்ரா-மெட் ராஸ் மெயில்.

எதிரொலியாக ''மாதாஜிகி ஜெய்'' என்று வானளாவ கோஷமிட்டனர், திரண்டு வந்திருந்த சென்னைவாசிகள்.

வங்கம் தந்த விவேகாநந்தரை உலகுக் குத் தந்த பெருமை தமிழகத்துக்கே அதிகம் உண்டு. அமெரிக்கா செல்லுவ தற்கு அவருக்கு ஊக்கமும் பொருளுதவி யும் பெருமளவில் செய்தது தமிழகமே. சென்னையில் அம்மாவின் அன்புப் பிள்ளை 'சசி'யான ஸ்ரீமத் ராமகிருஷ்ணாநந்த



ஸ்வாமிகள் மடம் அமைத்து அற்புத சேவை செய்து கொண்டிருந்தார்.

மயிலையிலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்துக்கு அருகிலேயே அம்மாவுக்கென ஒரு வீடு அமர்த்தப்பட்டது. அம்மா இங்கு 1911ம் ஆண்டு பிப்ரவரியிலிருந்து சுமார் ஒரு மாத காலம் வசித்தாள். 'மட்டிட்ட புன்னையங்கானல் மடமயிலை'யில் அவளது வாசம் மட்டிலா மகிழ்ச்சியுடன் நடைபெற்றது. அவளுக்கும் மகிழ்ச்சி. தமிழ் மக்களுக்கும் மகிழ்ச்சி. 'மலிவிழா வீதி மடநல்லார் மாமயிலை'யில் அம்மா இருந்த வீதி விழாக் கோலம் கொண்டது. ஏராளமான பக்தர்கள் வந்தனர். அவர்களில் எத்தனையோ பேருக்கு அம்மாவே மந்திரோபதேசமும் அளித்தாள். இதில் ஒரு விந்தை! அம்மாவும் தமிழ் மக்களும் உரையாடுகையில் மொழிபெயர்ப்பாளர் உடன் இருப்பார். ஆனால் அம்மா ஒருவருக்கு மந்திர தீக்ஷை அளிக்க எண்ணியவுடன், மொழிபெயர்ப்பாளரை அப்பால்போய்விடச் சொல்வாள். இதன் பின் அவள் மந்திரத்தை அளித்து, அதன் செய்முறையை வங்க மொழியிலேயே கூறினாலுங்கூடக் கேட்போருக்கு அது தெற்றெனப் புரிந்துவிடும். அதே போல் அவர்கள் தமிழில் கேட்கிற சந்தேகங்களையும் அம்மா புரிந்து கொண்டு விளக்கம் தந்தாள்!

சென்னை வாசத்தில் பல கோஷ்டிகள் அம்மாவை வந்து தரிசித்த போதிலும், அவள் மிகவும் ரசித்தது, பள்ளிச் சிறுமிகள் வந்து பைந்தமிழில் பாடி, வயலின் வாசித்ததைத்தான்.

கபாலீச்சரத்திலும், திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதி ஆலயத்திலும் அம்மா வழிபாடு செலுத்தினாள்.

பிரசித்திபெற்ற மெரினா பீச்சில் உலவினாள். அப்போது அரைகுறையாகக் கட்டப்பட்டிருந்த மீன் காட்சிச் சாலைக்கு முதன் முறையாக ரிக்ஷா ஏறிச் சென்றாள்.

அம்மா தன் மீது பாதம் பதித்து, ஒரு மாதம் வசித்த பாக்கியம் தமிழகத் தலைநகருக்கு உண்டு என்பதே நமக்குப் பெருமை ஊட்டுகிறதல்லவா?

# 39. மதுரையில் மாதா; சேதுவில் சீதா!

மகா சமுத்திரத்தில் இதோ காணப்படும் இதுவே சேதுபந்தனம் என்று கீர்த்தி பெற்ற தீர்த்தமாகும். இது மூவுலகிலும் விசேஷமாகப் பூஜிக்கத்தகுந்தது. பரம பவித்திரமானது. மாபாதகங்களையும் போக்குவது. இங்குதான் முன்பு பிரபுவான மகாதேவன் பிரசன்னமாகி அருள்புரிந்தனன்.

- வால்மீகத்தில் ஸ்ரீராமவசனம்

மீனாட்சி அருளாட்சி புரியும் மாமதுரையில் வந்திறங்கினாள் நம் மதுர மாதா.

அம்மாவுக்கும் பரிவாரத்துக்கும் நகர சபைத் தலைவர் வீட்டில் இருக்கை தயார் செய்யப்பட்டது.

பிற்பகலில் அம்மா பொற்றாமரைக் குளத்தில் விதிவத்தாக நீராடி விட்டு, ஆலவாய் அண்ணலையும் அங்கயற் கண்ணியையும் உள்ளம் குழைந்து தரிசித்தாள். 'இங்குள்ள அம்பாள் விக்கிரகம் ஜீவசக்தியுடன் திகழ்வது. காண்போர் உள்ளத்தில் புதியதோர் எழுச்சி அளிப்பது. இதற்கு நிகராக இன்னொன்றைக் காண்பது கடினமே' என்கிறார் அம்மாவின் சரிதையைக் கூறும் ஸ்வாமி கம்பீராநந்தர்.

மீண்டும் பொற்றாமரைக் குளத்துக்கு வந்தாள் அம்மா. நிறைய அகல் விளக்குகள் வாங்கி, தன்னுடன் வந்த ஒவ்வொருவர் பெயரையும் சொல்லி அவர் க்ஷேமத்தைக் கோரித் தீபமேற்றிக் கரையில் வைத்தாள். உடன் வந்தவர்களும் இவ்விதமே செய்தனர்.

உத்தர பாரதத்தில் எங்குமே கண்டிராத மாபெரும் கோபுரங்களையும் மண்டபங்களையும், சிற்பச் செல்வங்களையும் மதுராபுரியில் கண்டு வியந்தாள் அம்மா. திருமலை நாயகர் மகால், தெப்பக் குளம் இவற்றைக் கண்டு பிரமித்தாள். "ஆஹா, டாகூர்தான் என்னென்ன அற்புத லீலைகள் பண்ணியிருக்கார்!" என்றாள்.

அம்மா கோஷ்டியினர் ராமேசுவரத்தை அடைந்தபோது இரவு பதினொரு மணி. அர்த்த ஜாமமாகிக் கோயிலை மூடி இருந்தும், கோபுரத்துக்கு வெளியே நின்று வணங்கி வந்தாள் அம்மா. மறு நாள் அதிகாலையிலே சங்கற்பத்துடன் சேது ஸ்நானம் முடித்து, ராமநாதஸ்வாமியின் ஆலயத்தை அடைந்தாள். உலகப் புகழ் கொண்ட அந்த மாபெரும் பிராகாரம் உலகப் புகழ் கொண்ட அம்மா தன் மீது பிரதட்சிணம் செய்கிற பேற்றை அடைந்தது.

விவேகாநந்தரது அந்நியப் பயணத்துக்கு ஒரு முக்கிய ஊன்றுகோலாக இருந்து உதவிய ராமநாதபுரம் மன்னர், "தமது குருவுக்குக் குருவாகிய" அம்மாவுக்கு விசேஷ வரவேற்பு அளிக்க வேண்டும் என்று தேவஸ்தானத்துக்குத் தெரிவித்திருந்தார். அதன்படி ஆலய நிர்வாகிகள் அம்மாவை விசேஷமாக உபசரித்து அழைத்துச் சென்றனர். அம்மாவையும் உடன் வந்தோரையும் கர்ப்ப

திருசுத்துக்குள்ளேயே அநுமதித்தனர். அம்மாவே நேராகத் தன் திருக் கரத்தால் ஸ்ரீராமநாதலிங்கத்துக்கு கங்காபிஷேகம் செய்து, அர்ச்சனை புரியலாம் என்றும் விண்ணப்பித்துக்கொண்டனர்.

ராமலிங்கத்தின் மீது அணிவிக்கப்பட்ட பொற் கவசம் கழற்றப்பட்டது. லிங்கத்தின்மீது பார்வை பதிந்ததும் குப்பென்று அம்மாவின் சரீரம் சிலிர்த்தது. அந்தச் சிலிர்ப்பிலே பதினாயிரம் ஆண்டுகள் உதிர்ந்தோடின. ''ஆஹா! அன்னிக்கு நான் வைச்சுட்டுப் போன மாதிரியே இருக்கே!'' என்று வெகு லலிதமான குரலில் வாய்விட்டுச் சொல்லிக் கொண்டாள் அம்மா.

கங்காதரனுக்குக் கங்கை நீராட்டினாள். தயாராகக் கொண்டு வந்திருந்த நூற்றி எட்டு சுவர்ண வில்வதளங்களால் அர்ச்சனை செய்தாள்.

ராமேசுவரத்தில் தங்கியிருந்த மூன்று நாட்களும் காலை மாலை இரு வேளையும் ஸ்வாமி தரிசனம் செய்து கொண்டாள் அம்மா. கடைசி தினத்தன்று கோயில் அர்ச்சகர் அனைவருக்கும் போஜனம் செய்வித்தாள். அவர்கள் ஒவ்வொருவருக்கும் தீர்த்தபாத்திரம் தானம் செய்தாள். 'ராமேசுவர மாகாத்மியம்' படிக்கச் சொல்லி சிரவணம் செய்தாள். அதில் விதிக்கப்பட்டிருந்தபடி, புராணத்தைக் கேட்கும் நேரம் முழுதும் தன் கையில் தாம்பூலம் வைத்திருந்து பிறகு அதை விநியோகித்தாள்.

அம்மாவுக்கு ஆலயத் திருவாபரணங்களை எல்லாம் காட்ட வேண்டுமென்றும், அதோடு மட்டுமின்றி அவற்றில் அவள் எதையேனும் விரும்பினால் அதை அவளுக்குக் காணிக்கையாகச் செலுத்த வேண்டும் என்றும் ராமநாதபுரம் அரசர் உத்தரவிட்டிருந்தார். ஆபரணங்களைப் பார்த்து மகிழ்ந்தாள் அம்மா.

''அம்மா, தாங்கள் இதுகளில் எதையேனும் எடுத்துக்கலாம். ராஜாவுடைய விருப்பம்'' என்று நிர்வாகிகள் கூறினர்.

''எனக்கு ஏதுக்கப்பா, இதெல்லாம்? என் தேவை என்னவோ அதை எல்லாம் சசி (ராமகிருஷ்ணானந்தர்) கவனிச்சுக்கறான். இந்த யாத்திரையிலே எனக்கு ஒரு குறையும் இல்லே.''

''அப்படிச் சொல்லக் கூடாது. மகாராஜா விருப்பத்துக்காகவாவது..''

அம்மா சிறிது யோசித்தாள். பிறகு ராதுவைக் காட்டி, ''இந்தக் குழந்தைக்கு ஏதாவது வேணும் என்றால் எடுத்துக்கட்டும்'' என்றாள்.

இப்படிச் சொன்னவுடனேயே அம்மாவுக்குத் 'திக்' 'திக்' என்று அடித்துக் கொள்ள ஆரம்பித்தது. 'ஐயோ, டாகூர்! யோசனையில்லாமல் என்ன

பெண்ணாகப் பிறந்தவர்கள் எளிதில் கோபத்துக்கு இடம் தரலாகாது. அவர்கள் சகிப்புத் தன்மையை விடாமல் பயில வேண்டும். சிறு வயதில் பெற்றோரின் காப்பிலும், நடு வயதில் கணவனின் காப்பிலும் இருக்க வேண்டிய பெண்கள், எத்தனை கஷ்டம் ஏற்பட்டாலும் பொறுத்துக் கொண்டு இவர்களோடு ஒத்து வாழவேண்டும். ஆனால் பொதுவில் பெண்கள் தான் எளிதில் உணர்ச்சி வசமாகிறார்கள். ஒரு சிறு சொல்லும் அவர்களை நிலை குலைத்துவிடுகிறது. இந்தக் காலத்திலோ, சொந்தங்களுக்கு மதிப்பே இன்றி அவை வாரி வீசப்படுகின்றன. அதெப்படியாயினும் பெண்களுக்குப் பொறுமை அத்தியாவசியம். —தூய அன்னை சாரதா தேவி

காரியம் பண்ணிட்டேன்? இந்தப் பெண் விலை உசந்ததாக எதையாவது எடுத்துண்டுதுன்னா என்ன செய்வேன்? நீங்கதான் ராதிக்குச் சபலம் ஏற்படாமல் ரட்சிக்கணும்' என்று அழமாட்டாக் குறையாக முறையிட்டாள்.

முறையீட்டை டாகூர் கேட்டுவிட்டார். பொன்னும் மணியுமாக ஜொலிக்கும் அத்தனை குவியலையும் குப்பையாக ஒதுக்கினாள் ராது. ''நேக்கு இது ஒண்ணுமே பிடிக்கலே. என் காயித பென்சில் காணாமல் போயிடுத்து. எனக்கு அது தான் வேணும்'' என்றாள்.

அம்மா நிம்மதியாக நெடுமூச்சுவிட்டாள். அரையணாவுக்கு ஒரு பென்சில் வாங்கி வரச் சொல்லி மருமானைத் திருப்தி செய்வித்தாள்.

கோயிலைவிட்டு ஜாகைக்கு வந்தபின் பசங்கள் அனைவரும் அவளை முற்றுகையிட்டனர்: ''லிங்கத்தின் கவசத்தைக் கழட்டினதும் நீங்க சொன்னேளே, அதுக்கு என்ன அர்த்தம்?''

அம்மா அந்தக் காலப் புது மாட்டுப் பெண் போல் தலை குனிந்தாள்.

பிரம்மசாரி கிருஷ்ணலால், ''உங்களை விடமாட்டோம். 'அன்னிக்கு நான் வைச்சுட்டுப் போன மாதிரியே இருக்கே'ன்னு சொன்னேள். நாங்க நன்னாக் கேட்டுண்டோம். நீங்க மறுக்க முடியாது. அதை விளக்கினால்தான் ஆச்சு'' என்றார்.

''குழந்தைகளா, என்னை ஏன் துளைக்கறேள்? சில சமயத்திலே என் உதட்டிலே ஏதாவது உளறல் வந்துடறது. அதுக்கு அர்த்தம் கேட்டா என்ன பண்ணுவேன்?'' — அம்மா அவர்களை மேலே பேச விடவில்லை.

அவர்கள் கல்கத்தாவுக்குத் திரும்பிய பிறகு கேதார்நாத் தத்தா (பிற்காலத்தில் கேசவானந்த ஸ்வாமிகளான பக்த சிரேஷ்டர்)வுக்கு தட்சிண யாத்திரை பற்றிய விவரங்களை அம்மா உற்சாகமாகச் சொல்லிக் கொண்டிருந்தாள். உற்சாகத்தில் மீண்டும் அவள் உதட்டி

விருந்து இதே 'உளறல்' உதிர்ந்துவிட்டது. ''குழந்தே ! ராமேசுவரத்திலே, அடாடா, ராமநாதன்தான் எப்படியிருக்கான், தெரியுமோ ? அன்னிக்கு நான் எப்படி வச்சிட்டு வந்தேனோ அப்படியே இருக்கான்'' என்று கூறியவள் நாக்கைக் கடித்துக் கொண்டாள்.

கோலாப்-மா அம்மாவைச் சிக்கெனப் பிடித்துக் கொண்டாள். அம்மாவோ, ''என்ன கோலாப், ஒண்ணுமில்லாததுக்கு அமர்க்களப் படுத்தறேள் ?'' என்றாள்.

''ஒண்ணுமில்லாததோ ? 'ஆதியில் எப்படி வைச்சேனோ அப்படியே இருக்கான்'னு சொன்னேளாக்கும்.''

''இல்லவே இல்லை.'ராமேசனைப் பற்றி ஆதியில் எத்தனையோ கேள்விப்பட்டிருக்கேன். எப்படிக் கேட்டிருக்கேனோ அப்படியே இருக்கான்'னு சொல்லேன்.''

''பொய், பொய். ஆனானப்பட்ட அம்மா பொய் சொல்றேளே!''

கோலாப் வெளியே போய் மற்ற சிஷ்யர்கள் எல்லோரிடமும் ஆர்த்துக் கூறினாள்: ''சேதுவிலே ராம்ஜியோடு கூட சீதா மாதாவும் சேர்ந்து லிங்கம் பிடிச்சு, அர்ச்சனை பண்ணி, பிரதிஷ்டை பண்ணிட்டு வந்தா தெரியுமோ ? அதைத்தான் அம்மா ஒரு தடவைக்கு இரண்டு தடவையாகச் சொல்லிட்டா. மாடியில் இருக்கிற நம்ப மாதா யார் தெரியுமா, சீதாவாக்கும்.''

தநுஷ்கோடிக்குப் போக அம்மாவுக்குச் சௌகரியப்படவில்லை. ஆயினும், இரண்டு சிஷ்யர்களை அனுப்பி வைத்து, தன் பெயரில் வழிபட்டு வரச் சொன்னாள். அவர்களிடம் வெள்ளியிலான சிறிய வில்லும், அம்பும் கொடுத்து, ''தநுஷ்கோடியிலே சமுத்திர ராஜனுக்கு தநுசும் பாணமும் அர்ப்பணம் பண்ணணும்'' என்றாள்.

க்ஷேத்திரங்களைக் குறித்த சாத்திரங்களில் அம்மாவுக்கு அவ்வளவு சிரத்தை.

மதுரை வழியாக மதராசுக்கு மீண்டும் வந்தாள் அம்மா. அவளது முன்னிலையில் அவ்வாண்டு ஸ்ரீராமகிருஷ்ண ஜயந்தி வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அன்று இந்தச் சென்னைக்கு டாகூரும் சூக்ஷ்ம ரூபத்தில் வந்திருக்கத்தான் வேண்டும் ! அந்தப் புண்ணிய தினத்தில் அம்மாவிடம் மந்திரம் பெற்றனர் சில அதிருஷ்டசாலிகள்.

1911ம் ஆண்டு மார்ச் கடைசியில் அம்மா பெங்களூர் சென்றாள். விஸ்தாரமான பழமரத் தோட்டத்தோடுகூடிய பெங்களூர் ராமகிருஷ்ண மடத்தில் ஒரு வாரம் தங்கியிருந்தாள். அங்கு பக்தர் கூட்டம் அர்ப்பணிக்கும் மலர்கள் மலையாகக் குவியுமாம்.

ஆசிரமத்துக்குப் பின்புறத்திலே ஒரு குன்று உண்டு. ஒரு நாள் அஸ்தமன சமயத்தில் அம்மா அதன் உச்சிக்குப் போனாள். மலை வாயில் விழுகிற செக்கர் கோலத்தைக் கண்டு சொக்கிப் போனாள். தன்மயமாக, சின்மயமாக, குன்றுச்சியில் அமர்ந்தாள்.

இச்செய்தி அறிந்ததும் ராமகிருஷ்ணானந்தர் பரவசமுற்றார். 'ராமேசுவரத்தில் பர்வதவர்த்தினியைப் பார்த்து வந்த அம்மா பர்வதவாசினியாகவே ஆனாளா?' என்று பூரித்தார். தமது பெரிய தேகத்தைத் தூக்கவொண்ணாமல் தூக்கிக் கொண்டு வேகமாகக் குன்றேறினார்.

அம்மாவின் அடியில் தம் முடிபட, உடல் முழுவதும் அவள் நடந்த பொடி பட விழுந்தார்.

ஸர்வ மங்கல மாங்கல்யே சிவே
ஸர்வார்த்தஸாதிகே
சரண்யே த்ரியம்பகே கௌரி
நாராயணி நமோஸ்துதே
ஸ்ருஷ்டி ஸ்திதி விநாசானாம் சக்திபூதே
ஸநாதனி
குணாச்ரயே குணமயே நாராயணி
நமோஸ்துதே
சரணாகத தீனார்த்த பரித்ராண
பராயணே
ஸர்வஸ்யார்த்திஹரே தேவி நாராயணி
நமோஸ்துதே

சகல பிரபஞ்சங்களையும் இயக்கும் மகாசக்தியே சாக்ஷாத்தாக எதிரே அமர்ந்திருக்கிறது என்ற விழுமிய உணர்வுடன் சுலோகங்களை மொழிந்து வணங்கினார் ராமகிருஷ்ணானந்தர்.

அம்மா அவர் சிரசை அழுந்தத் தொட்டு ஆசி கூறினாள்.

பெங்களூரில் நடந்த வேடிக்கை நிகழ்ச்சி ஒன்றினைப் பாருங்கள் :

அம்மா சாமானியப் புடவை அணிந்து சாதாரண ஸ்திரீ போல் அறையோரத்தே அமர்ந்திருக்க அவளைத் தரிசிக்க வந்த பணக்கார பக்தை ஒருத்தி பட்டும் பூஷணமுமாக மையத்தில் உட்கார்ந்திருந்தாள். பெண்கள் கோஷ்டியொன்று 'நடுநாயகி'யை சாரதா தேவி என்றெண்ணி அவள் எதிரே காணிக்கைகளை வைத்து நமஸ்கரித்தனர். அந்த அம்மை விலவிலத்துப் போனாள். ''என்னை நமஸ்கரிக்காதீர்கள்'' என்று உடலை நெளித்தாள். அம்மா மிகவும் அடக்கமானவள் என்று கேள்விப் பட்டிருந்த அப்பெண்கள், அடக்கம் காரணமாகவே தன்னை வணங்கவும் கூடாது என்று சொல்கிறாள் என்றெண்ணிப் பிடிவாதமாக நடுநாயகிக்கு வணக்கம் செலுத்தினர். அதோடு நில்லாமல், ''பாத ஸ்பரிசம் தரணும்'' என்று வேறு கைநீட்ட ஆரம்பித்து விட்டனர்.

அடுத்த இதழ்

# சிறுகதைச் சிறப்பு மலர்

- ஆர்வி
- குயிலி
- சுஜாதா

ஆகியோரின் சிறப்புச் சிறுகதைகள்

(அதிக பக்கங்கள்)

குறுநாவல்:

ர.சு.நல்லபெருமாள் எழுதிய

## திருமணம் ஓர் ஒப்பந்தம்

அந்த அம்மாள் துள்ளி எழுந்து, படாத பாடு பட்டுக் கூட்டத்தை விலக்கிக் கொண்டு வெளியேறினுள். இத்தனை யையும் பார்த்துக் கொண்டு அம்மா மாருத முறுவலுடன் ஓரத்தே அமர்ந் திருந்தாள்.

பெங்களூரிலிருந்து சென்னை மார்க்க மாக ராஜமகேந்திரபுரம் சென்று கோதாவரியில் நீராடினுள் அம்மா. அங்கு ஸ்ரீமான் எம். ஏ. பார்த்தசாரதி அய்யங்கார் என்ற ஜில்லா நீதிபதியின் வீட்டில் தங்கினுள். ஜகந்நாதபுரியைத் தரிசித்துக் கொண்டு 1911 ஏப்ரல் மத் தியில் கல்கத்தாவுக்குத் திரும்பினுள்.

ஒரு நாள் சாதுக்கள் சமூகப் பணி செய்வது பற்றிப் பேச்சு வந்தது. ராம கிருஷ்ண மடத்தில் சமயப் பணியோடு சமூகப் பணியை விவேகாநந்தர் பிணைத் ததிலிருந்து வாக்குவாதங்கள் நடந்த துண்டு. சாதுக்கள் முற்றிலும் பாரமார்த் திகத்திலேயே ஈடுபட்டிருக்க வேண்டும் என்றும், விவேகாநந்தர் வகுத்துள்ள சமூக சேவைத் திட்டம் டாகூரின் ஒப்பு தலைப் பெற்றிருக்குமா என்பதும்கூட சந்தேகத்துக்கு இடமானதே என்றும் குருபாயிக்கள் உள்படப் பலர் கருத்துத் தெரிவித்திருக்கிறார்கள். எனவே, இவ் விஷயத்தில் அம்மாவின் அபிப்பிராயத் துக்கு மிகுந்த முக்கியத்துவம் உண்டு. தனக்கே உரிய தெளிவுடன், பிரத்தி யட்ச கண்ணேட்டத்துடன் பட்டுக் கத்திரித்தாற்போல் அம்மா பேசினுள்: "ஒருவர் இருபத்து நாலு மணியும் ஜபம், தியானம் இதுகளையே செய்வது நடக்கிற காரியமா? அவையில்லாத போது புத்தியை வெறுமனேவிட்டால் அது கண்டபடி சஞ்சரிக்கும். அதனுல் ஆத்ம ஆரோக்கியத்துக்கே ஹானி வரும். ஆகையால் சாதுக்களும்கூட வேறே உபயோகமான காரியங்களில் மனசைச் செலுத்தத்தான் வேணும். அதுதான் மனசு சுத்தமாயிருக்க வழி. டாகூர் இப்படியெல்லாம் ஊழியம் பண்ணிஞரான்னு கேட்கிறு. அவர் ஒரு விதிவிலக்கு. அது சரி, அவருக்கு மதுர்பாபு இருந்தார், வேளா வேளைக்கு சுசி ருசியா ஆகாரம் அனுப்பறதுக்கு. இந்தக் காலத்திலே எல்லா சாதுக்களும் வீடு வீடா பிட்சை கேட்டுண்டு போறது நடக்கிற காரியமா? தங்கள் வயிற்றுக்காக ஏதோ ஒரு தினுசில் உழைக்கத்தான் வேணும். அபூர்வமா சில பேர்தான் எப்பவும் தியானத்திலே முழுகியிருக்க முடியும். மற்றவா அது போக மற்ற வேளையிலே ஏதோ ஒரு வேலையிலே மனசைச் செலுத்தத்தான் வேணும். இதையெல்லாம் நன்ருப் புரிஞ்சுண்டுதான் நரேன் சுயநலமில் லாத தொண்டு பண்ணணும்னு ஆரம் பிச்சான்."

அம்மா இப்படிச் சொன்னது ராம கிருஷ்ண சங்கத்தினருக்கே ஒரு புதிய தெளிவையும், ஆர்வத்தையும் அளித் தது. இதுபோல் பல இனங்களில் அம்மா கண்ணுக்கு இடருமலே வெகு பக்குவமாக சங்கத்தைப் பேணினுள்.

ராமேசுவரத்தில் ராது 'காபித பென்சில்' கேட்டுக் கொண்டிருந்த போதே, இங்கே ஜயராம்பாடியில் அவ ளுக்குக் கல்யாண ஏற்பாடு நடந்து வந்தது.

தாஜ்பூரில் செல்வச் செழிப்புள்ள சட்டர்ஜீ குடும்பத்தைச் சேர்ந்த மன்மதநாத்தை வரனுகத் தேர்வு செய் தார்கள். "அவா ரொம்பப் பணக் காரா. நிறைய எதிர்பார்ப்பா. நமக்குச் சரிப்படுமா?" என்ருள் அம்மா. உடனே சாரதாநந்தர், "பண விஷயத்தைப் பற்றி நீங்க ஏனம்மா அலட்டிக்கணும்? எங்கிட்டே விடுங்கோ" என்ருர். அம்மாவுக்கு வீடு எழுப்பிய அந்த அரு மைப் புத்திரர் ராதுவின் திருமணத் துக்கு வேண்டிய நிதியத்தையும் சேர்த்து வைத்திருந்தார். மன்மத நாத்துக்கே நிச்சயம் செய்தார்கள்.

1911ம் வருஷம் ஜ்யேஷ்ட மாதம் 27ந் தேதி சுப முகூர்த்தத்தில் பதி னேரு வயதான ஸௌபாக்கியவதி ராதாராணியைப் பதினேந்து வயதான சிரஞ்சீவி மன்மதநாத் பட்டாசாரியருக் குக் கன்யாதானம் செய்தனர். 'கன்யாம் கனகஸம்பந்நாம்' என்று சாஸ்திரம் விதிக்கிறபடியும், பிள்ளைவீட் டாருக்குத் திருப்தி தருகிற விதத்தி லும், ராதுவைத் தலையிலிருந்து கால் வரையில் கிண்டு கிண்டான தங்க, வெள்ளி நகைகளால் இழைத்திருந்தார் அம்மாவின் பிரிய 'ஷரத்'.

திருமண விருந்தின்போது, அம்மா இந்தப் பாரத தேச உபசரிப்புப் பண்பே உருவெடுத்து வந்ததுபோல் பந்தியில் இருப்போரிடம், "சமையல் எல்லாம் சரியாயிருக்கா? பார்த்துப் பரிமாறு கிருளா? சங்கோசம் இல்லாம நன்ரு சாப்பிடுங்கோ" என்று சொல்லிக் கொண்டிருந்தாள்.

மாப்பிள்ளை மன்மதநாத் அம்மா விடம் மந்திரோபதேசம் கோரினுர். முதலில், "நான் உறவுக்காராளுக்கு உபதேசம் தருகிறதில்லையே!" என்று கூறிய அம்மா மனத்தை மாற்றிக் கொண்டு அவருக்குத் தீக்ஷை தந்தாள். அதற்குக் காரணத்தை அத்தியந்த சீட ரிடம் சொன்னுள்: "பகவத் சங்கற்பத் தில் யாரும் குறுக்கிடக் கூடாதுதான்.

# இந்திய டேவிஸ் கப் விளையாட்டு வீரர் விஜய் அமிர்தராஜ் பிலிப்ஸ் சைக்கிள் உதவியினால் தன் உடல் வளத்தை தெம்புடன் வைத்திருக்கிறார்






டென்னிஸ் விளையாட்டில் அமிர்தராஜ் பாய்ந்தோடி பதிலடி கொடுப்பதில் வல்லவர். அவரது விளையாடுவதற்கு தம்முடைய உடல் எப்பொழுதும் தெம்புடன் இருக்கவேண்டிய அவசியத்தை அவர் அறிவார். இதற்காக அவர் தினமும் பிலிப்ஸ் சைக்கிளில் சவாரி செய்யத் தவறுவதில்லை. உலகப் புகழ்வாய்ந்த பிலிப்ஸ் ஊக்கமிகு வாலிபர்களுக்கு உகந்தது. அது கவர்ச்சியானது. அனாயாசமாக சவாரி செய்ய வல்லது.

இதர பிலிப்ஸ் மாடல்கள்:

| |
|---|
| பிலிப்ஸ் ஒலிம்பியா [சூபர்ப் மாடல்] |
| பிலிப்ஸ் லேடீஸ் மாடல் |
| ஊக்கமிகு வாலிபர்கள் உகந்து வாங்குவது பிலிப்ஸ் |



இந்தியாவில் தயாரிப்போர்:
டி ஐ. சைக்கிள்ஸ்
ஆஃப் இந்தியா
அம்பத்தூர், சென்னை 53
உரிமையாளர்கள்:
டியூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ்
ஆஃப் இந்தியா லிமிடெட், சென்னை
பதிவுபெற்று உபயோகிப்போர்.

TICPH/7038

# பார்லே க்ளூகோ– போஷாக்கு நிரம்பிய அதிக ருசியுள்ள பிஸ்கெட்



எப்பொழுதும்
இவை அடங்கியது–
வைட்டமின்கள் ஏ-டி-பி$_1$-பி$_2$-
கால்ஷியம்-ப்ரோடீன், பால்,
கோதுமை, சர்க்கரை,
க்ளூகோஸ்




everest/306g/PP tam

## பார்லே க்ளூகோ பிஸ்கெட் புசித்து வளர்வதே பேரானந்தம்!

இந்தியாவின் மிக அதிகமாக விற்பனையாகும் பிஸ்கெட்டுகள் பார்லே க்ளூகோ

இருந்தாலும் இந்த ராதி மந்திரோபதேசத்தின் சக்தியினுலே பாலிய விதவையாகிறதிலிருந்து தப்பினுலும் தப்பலாம்'' என்றுன்.

(ராது பாலிய விதவையாகவில்லைதான். ஆனுலும் பிற்காலத்தில் அவள் கணவனுல் தள்ளி வைக்கப்பட்டே காலம் கழித்தாள்.)

> எவ்வித சொந்த அநுபவமும் இன்றிச் சமயப் புத்தகங்களை மட்டும் படித்து விட்டுச் சிலர் ஈசுவரனை விவரிக்க முயல்கிறார்களே, இது எந்துணை விசித்திரம்! இது தேசப்படத்தில் மட்டும் காசியைப் பார்த்துவிட்டு அந்த ஸ்தலத்தைப் பற்றி விவரிப்பது போன்றதே!
>
> - பரமஹம்ஸ ராமகிருஷ்ணர்

ராமகிருஷ்ணுநந்தர் கல்கத்தா உத்போதனுக்கு வந்து மரணப் படுக்கையில் விழுந்தார். அம்மாவை அழைத்து வர ஜயராம்பாடிக்கு ஆள் பறந்தது. தட்சிண தேச விஜயத்தின் போது அம்மாவின் ஆதிசேஷனுகவும் அனந்தாழ்வானுமாக இருந்த ஸ்வாமிஜியின் நிலை கேட்டு அவள் பதறி ஓடி வருவாள் என்றே எதிர்பார்த்தனர். ஆனுல் அவளோ, ''நான் வரல்லே. நான் அங்கே வந்தால் எனக்காகக் கூட்டம் கூடறதும், என்னைச் சவரணை செய்யறதும் தான்பெரிசா இருக்கும். குழந்தை சசிக்குக் கவனிப்புக் குறைஞ்சுடும்'' என்றுள்.

குழந்தை சசி அம்மாவை வெகு ஆவலாக எதிர்பார்த்தார். அம்மா இப்படிச் சொல்லி விட்டாளே என்று ஏமாற்றத்துடன் தூதர் திரும்பினுர்.

அடி அடியாக அந்திமத்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்த ராமகிருஷ்ணுநந்தர், குழந்தை சசியாகவே ஆனுர். குழந்தையின் ஆனந்த நகை முகத்தில் பரவ, ''இதோ அம்மா வந்துட்டாளே! எங்கிட்ட உட்கார்ந்திருக்காளே!'' என்றுர்.

பக்கத்திலிருந்த கிரீஷ் பரவசமானுர். அம்மா தந்த அந்த 'ரகசிய தரிசன'த்தைக் கவிதையாக்கிப் பாடினுர். அந்தப் பாட்டைக் கேட்டுப் புளகித்தார் ராமகிருஷ்ணுநந்தர். ராமகிருஷ்ணரில் நிரந்தரமாகக் கரைந்தார்.

அம்மாவுக்குச் சோகச் செய்தி தெரிவிக்கப்பட்டபோது, ''என் சசி போய் விட்டானு? என் முதுகெலும்பு முறிஞ்சு போச்சு'' என்று தேம்பி அழுதாள்.

ராதியின் திருமணம் நடந்து ஐந்து மாதங்களுக்குப் பிறகு அம்மா மீண்டும் கல்கத்தா செல்வதாக முடிவாயிற்று. வழியிலே கோயால்பாரா ஆசிரமத்துக்கு அவளை அழைப்பதற்காக கேதார் பாபு வந்தார்.

அம்மா வெற்றிலைச் சுருள் தயாரித்துக் கொண்டே பேசினுள்: ''குழந்தே! உன் ஊரிலே டாகூருக்காக ஜாகை வைச்சுட்டே! எனக்கும் அதைச் சிரம பரிகாரத்துக்கு ஆசிரமமாக்கிட்டே! அதனுலே இப்போ அங்கே வரச்சே என் கையாலே டாகூரைப் பிரதிஷ்டை பண்ணப்போறேன். அதுக்கு எல்லாம் தயார் பண்ணு. நீயும் மற்றவாளும் பிரதி தினமும் ஒழுங்கு தப்பாமல் பூஜை நடத்திண்டு வரணும். ஹவிஸ் வைச்சு நிவேதனம் பண்ணணும். சாயரட்சையும் தூப தீபம் காட்டி ஆராத்ரிகம் பண்ணணும்.'' குரலில் திடுமென உறுதி தொனிக்கத் தொடர்ந்தாள்: ''மகனே! 'சுதேசி சுதேசி'ன்னு இருக்கிறதாலே மட்டும் நீ என்ன அடைஞ்சுட முடியும்? நமக்கு டாகூர்தான் கதி. நம்மோட சகல காரியத்துக்கும் அவர்தான் மூலாதாரம்'' என்றுள்.

கேதார் பாபுவுக்கு நெஞ்சம் குறுகுறுத்தது. அம்மாவுக்கு எல்லாம் தெரிந்திருக்கிறதே என்று ஆச்சரியப்பட்டார். வைஸராய் கர்ஸனின் யதேச்சாதிகாரப் போக்குகளை — குறிப்பாக வங்காளத்தைப் பிளக்கும் உத்தேசத்தை—எதிர்த்து அப்போது அரசியல் இயக்கம் வலுப்பெற்றிருந்தது. அந்நிய வஸ்துக்களைப் பகிஷ்கரிக்கும் சுதேசி இயக்கமும் தொடங்கி விட்டது. கோயல்பாரா ஆசிரமவாசிகளுக்கு அதில் ஈடுபாடு அதிகம். எனவே அங்கு ஓரளவு போலீஸின் கண்காணிப்புக்கூட இருந்தது.

அம்மா சொன்னதைக் கேட்டுக் கேதார் வாயடைத்துப் போனுர். ராமகிருஷ்ணதாசர்கள் சமயத்தை விட்டு அரசியலில் சேருவதற்கில்லை என்கிறுள். அரசியல் அலையில் அடித்துச் செல்லப்படவிருக்கும் ஆசிரமத்துக்கு நங்கூரம் பூட்டவே டாகூர் படத்தைப் பிரதிஷ்டித்து, அன்றுட வழிபாட்டை விதிக்க உள்ளம் கொண்டிருக்கிறுள்.

அம்மா சொல்லுக்குத் தலைவணங்கினுர் கேதார்.

கடுங் குளிரையும் பொருட்படுத்தாமல் பிராம்ம முகூர்த்தத்திலேயே சிவிகை ஏறிக் கோயால்பாராவுக்குச் சென்றுள் அம்மா. நீராடிவிட்டு ஆசிரம மண்டபத்தில் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் திருவுருவப் படத்தைத் தனது பொற்கரங்களால் பிரதிஷ்டை செய்தாள். அதன் பக்கத்தில் தனது சித்திரத்தையும் தானே பிரதிஷ்டை

செய்தான்-ஸ்ரீராமாநுஜர் தாமே உகந்த திருமேனியாக ஸ்ரீபெரும்பூதூருக்குத் தமது விக்கிரகத்தை அனுப்பினார் என் பார்களே அதுபோல்! பிரதிஷ்டை செய்தது மட்டுமல்ல. ஸ்ரீ ராமகிருஷ்ண தேவர், ஸ்ரீ சாரதாமணி தேவி இரு வருக்கும் சாரதையே விதிப்படி கந்த, புஷ்ப, தூப, தீப, நிவேதனங்களும் செய் தாள். இதில் வியப்பதற்கு என்ன இருக்கிறது? அவள் வேறு ஒரு தெய்வ உருவை வைத்துப் பூஜை செய்தபோதும் கூட, அது வேறு தான் வேறு என்று நினைத்தா செய்தாள்?

துரதிருஷ்டவசமாக நம் அம்மா பன்முறை புத்திர சோகத்துக்கு ஆளாக நேரிட்டது. அவளைப் பராசக்தி யாக அன்றி வேறெவ்விதத்திலும் கருத அறியாத கிரீஷ் சந்திர கோஷ் காலகதி அடைந்து விட்டார். அம்மா தனக்குள் அமுங்கிப் போனாள். அபர காரியங் களுக்கு அம்மாவை அழைத்தனர். ''என் கிரீஷ் இல்லாத அந்த வீட்டிலே என்னால் கால் எடுத்து வைக்க முடியுமா? அது சாத்தியமா?'' என்று விம்மினாள் அம்மா.

பேலூர் மடத்தில் நவராத்திரி கடைசி மூன்று தினங்களில் நிகழும் துர்கா பூஜைக்கு முன்பு அம்பாளுக்குத் திருப் பள்ளி எழுச்சி செய்தார்கள். 'போதன்' என்று இந்த விழாவுக்குப் பெயர். நீண்ட நேரம் அம்மாவுக்காகக் காத் திருந்தும் அவள் வராததால் மிகுந்த வருத்தத்துடன் போதன் செய்தனர். அம்பாள் விழிப்புறுகிற அதே விநாடி யில் அம்மா உள்ளே பிரவேசித்தாள். அனைவருக்கும் ரோமாஞ்சனம் உண் டாயிற்று. பிரேமாநந்தர் (பாபுராம்) கீழேயே விழுந்து விடுவார் போலிருந் தது. அம்மா அநாயாச கம்பீரத்துடன் ''ஏற்பாடு எல்லாம் கனஜோரா யிருக்கு. நானும் துர்காதேவி மாதிரியே ஜம்முனு வந்து சேர்ந்திருக்கேன்'' என்றாள்.

இரண்டாம் நாள் பூஜையின்போது மகான் பிரம்மாநந்தர் நூற்றியெட்டு மலர்ந்த கமலங்களால் அம்மாவை அர்ச் சித்தது கண்கொள்ளாக் காட்சி!

துர்கா பூஜை நடந்தபோது மூன்று தினங்களும் உணவு வேளையில் மழைச் சூல் கொண்ட கார்முகில்கள் மந்தை மந்தையாகத் திரண்டு வந்தன. மூன்று தினங்களும் அம்மா, ''வெட்ட வெளி யில் என் குழந்தைகள் எப்படி மழை யிலே சாப்பிடுவா?'' என்று கேட்டுக் கொண்டு பத்மாசனத்திலமர்ந்து துர்கா மந்திரத்தை ஜபித்தாள். அவர்கள் உண்டு முடியும்வரை, மூன்று நாட் களும் ஒரு தூறல் கீழே விழவில்லை.

மூன்றும் முறையாகக் காசியம்பதிக் குச் சென்றாள் அம்மா, தன் கோஷ்டி யுடன். இம்முறை அங்கு சுமார் மூன்று மாதங்கள் வாசம் செய்தாள்.

விசுவேசுவரன், விசாலாக்ஷி, அன்ன பூர்ணியைக் கண் குளிரத் தரிசித்துத் திரும்புகையில் அம்மா, ''எப்பேர்ப் பட்ட க்ஷேத்திரம்! இங்கே மரிச்சாலே ஈ, எறும்பு உள்பட எல்லா ஜீவராசிக் கும் முக்தியாச்சே!'' என்று வியந்தாள்.

உடன் வந்த பிச்சி மாமி ஸுரபாலா, ''ஏ சாரதாக்கா! அப்போ நீ இங்கேயே செத்துப் போ. முக்தியடையலாம்'' என்றாள்.

அம்மா பரிதாபமாகச் சிரித்தாள்.

''சாரதாக்கா, என்ன கேடு உனக்கு? சிரிக்கவா சிரிக்கறே? என்னையும் என் பெண்ணையும் நடுத் தெருவிலே நிறுத் திட்டு, ஊரிலே இருக்கிறவாளுக்கெல் லாம் வாரி விடறயே ராட்சஸி! இப்பவே செத்துத் தொலே'' என்று ஏகக் கூச்சலிட்டாள் பிச்சி மாமி.

அம்மா சிரித்துக் கொண்டே இருந் தாள். தம்பி மனைவிக்குப் பைத்தியமா, நாத்திக்குத்தான் பைத்தியமா என்று அடியார் சந்தேகிக்குமளவுக்கு அம்மா சிரித்தாள். உடனிருந்தவர்களுக்குக் கிலி எடுத்துவிட்டது. ''ஏம்மா இப்படிச் சிரிக்கிறேள்?'' என்றாள்.

''சிரிக்காமல் என்ன பண்ணுவது? இந்தச் சாரதா சாகிறதாவது? சாகவே முடியாத ஒரே ஒருத்தி நான்னு என் தம்பி பெண்டாட்டிக்குத் தெரியலேயே! அவ ஆசையை நான் எப்படிப் பூர்த்தி பண்ணறது?'' என்றாள்.

அனைவருக்கும் ஆகாயத்தில் பறக் கும் உணர்ச்சி உண்டாயிற்று. சட் டென்று அம்மா அதல பாதாளத் துக்கு வந்தாள். ''என்னைப் போல் துர்ப்பாக்கியசாலி பதினாலு லோகத் திலேயும் இருக்க முடியாது. டாகூர் ஒருமுறை ஸ்பரிசித்த மாத்திரத்திலேயே எத்தனையோ மகா பாவிகளுடைய கர் மாவெல்லாம் தொலைஞ்சே போய், அவா வாழ்க்கை ஆனந்த மயமாச்சு. நான் பிறந்த நாளாக ஒரு பாவம் பண்ணினதாக எனக்கு நினைவில்லே. என் அஞ்சாம் வயசிலே அந்த மகாப் பிரபு இதோ இந்தக் கையைப் பிடிச்சுப் பாணிக் கிரஹணம் பண்ணினார். அப் படியிருந்தும் என் கஷ்டம் ஏன் இன்ன மும் தீரவில்லே?'' என்றாள் தீனமாக.

பொங்கி எழுந்த உள்ளங்கள் அனைத் தும் சாம்பி விழுந்தன. (தொடரும்)

மேல்நாடுகளுக்குப் போய்ப் பயிற்சி பெற்றுத் திரும்ப ஒருவரைத் தேர்ந்து எடுக்கப் போகிறார்கள் என்ற பேச்சு அலுவலகத்தில் எழுந்ததுமே அந்த வாய்ப்பைப் பெறக்கூடியவன் மஹேஷ் ஒருவனே என அனைவரும் எண்ணியதில் வியப்பு ஏதும் இல்லை.

தன் இனிய பேச்சினால் அனைவரையும் தன்பக்கம் சேர்க்கக்கூடிய ஒரு சக்தி அவனுக்கு இயல்பாகவே உண்டு. பாரதமெங்கும் பரவியிருந்த அந்தப் பெரிய ஸ்தாபனத்தின் சென்னைக் கிளையில் உதவி மானேஜராக அவன் அமர்ந்த பிறகு அந்தக் கிளையின் வியாபாரம் மடமடவென்று உயர்ந்தது. விற்பனையில் முதல் என்பதற்கான சுழற் கேடயம் நான்கு ஆண்டுகளாகச் சென்னைக் கிளையில் நகராமல் உட்கார்ந்திருப்பது மஹேஷின் விடாமுயற்சியினால் மட்டுமே என்றால் அது மிகையாகாது.

மேல்நாடு போய் வர எல்லாக் கிளைகளிலிருந்தும் விண்ணப்பங்கள் கோரியிருந்தார்கள். மேற்கு ஜெர்மனியில் இரண்டு வருடப் பயிற்சி, பின்னர் அமெரிக்கா,—



ஜப்பான் ஆகிய நாடுகளில் ஒவ்வோர் ஆண்டு; நாடு திரும்பியவுடன் மத்திய அலுவலகத்தில் ஒரு நல்ல பதவி காத்திருந்தது. கிளை அலுவலக மானேஜரே மஹேஷை வற்புறுத்தி விண்ணப்பம் ஒன்று எழுதச் சொன்னார். தாம் போட்டியிட்டாலும் தேர்ந்தெடுக்கப்படுவோம் என்ற நம்பிக்கை அவருக்கே இல்லை.

மஹேஷ் போட்டி போடுகிறான் என்றதுமே மற்றவர்கள் பேசாமல் ஒதுங்கி விட்டார்கள். ஒப்புக்காக ஓரிருவர் தம் பெயரைக் கொடுத்துப் பின்னர் அதைப் பற்றி மறந்தேபோய் விட்டனர். தேர்வுக்காக பம்பாய் வரை கம்பெனிச் செலவில் இலவசப் பயணம் கிட்டும் என்ற ஆசையும் ஒரு காரணம்.

தகுதியான ஒருவரைப் பொறுக்கி எடுக்கக் கம்பெனியின் டைரக்டர்கள் ஒரு நேர்முகப் பேட்டி வைத்திருந்தார்கள். பம்பாயில் நடக்கவிருந்த அந்தத் தேர்வுக்குப் பிரமுகர்கள் மூவர் நடுவர்களாக இருப்பார்கள் எனக் கம்பெனி நிர்வாகம் அறிவித்திருந்தது.

மஹேஷ் தைரியமாக இருந்தான். எந்தக் கமிட்டி எதைக் கேட்டாலும் சமாளிக்க முடியும் என்ற நம்பிக்கை அவனுக்கு இருந்தது. நேர்முகத் தேர்வுக்கான விவரங்களை நினைவுபடுத்திக் கொண்டான். பொது அறிவு பற்றிய எந்த வினாவுக்கும் பதிலளிக்கத் தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டான்.

தேர்வுக்காக அவன் மறு நாள் சென்னையிலிருந்து பம்பாய்க்குப் புறப்பட வேண்டும். அப்போது தான் அவனுக்கு விவரம் தெரியவந்தது. தேர்வுக் குழுவின் தலைவர் ஓய்வு பெற்ற நீதிபதி ஸ்ரீசைலம் என்று!

# போட்டி

– அன்னம் –



ஆகாயமே இடிந்து தலையில் விழுந்தது போல் அதிர்ச்சியுற்றான் மகேஷ்.

அந்தப் பொருட்காட்சியில் மகேஷ் கம்பெனிக்கும் ஒரு 'ஸ்டால்' இருந்தது. வருபவர்களை வரவேற்றுத் தங்கள் கம்பெனியின் சாதனைகளை விளக்கிக் கொண்டிருந்தான் மகேஷ்.

பொருட்காட்சிக்கு வந்துபோன ஆயிரக் கணக்கானவர்களுடன் சரளமாக உரையாடிக் கொண்டிருந்த மகேஷைத் தனியாக ஒரு ஜோடிக் கண்கள் கவனித்தன. அவை ஜலஜாவினுடையவை. அழகான சுருண்ட முடி முன் நெற்றியில் விளையாட, உதடுகளில் தெளிந்த புன்னகை சற்றும் மாறாமல், தெளிந்த நீரோடை போன்ற சரளமான ஆங்கிலத்தில் அவன் பேசுவதைக் கேட்டுத் தன்னை மறந்தாள் அவள்.

அவளுடன் வந்தவர்கள் சென்ற பிறகும் தங்கி நின்ற ஜலஜாவைப் பார்த்தான் மகேஷ். அவளுக்கு என்ன தேவை என்று விநயமாகக் கேட்டான் அவன்.

''என் அப்பா இங்கே வந்திருக்க வேண்டும். அப்படியே பூரித்துப் போயிருப்பார்!'' என்றாள் அவள்.

''அப்படியா? ஒரு நாள் கட்டாயம் அழைத்து வாருங்கள்!'' என்று புன்னகையுடன் பதில்கூறினான் மகேஷ்.

''இந்த இரும்புச் சாமான்களுக்கு உங்கள் சொற்களால் ஜீவனை உண்டாக்கிவிட்டீர்கள். எங்கள் வீட்டில் இவைகளில் சில தேவைப்படும் என்று நினைக்கிறேன். ஆர்டர் கொடுத்தாலும் உங்கள் கம்பெனியில் — அதுவும் உங்கள் மூலமாகக் கொடுக்க வேண்டும் என்பது என் விருப்பம்'' என்று கூறி நிறுத்தினாள் ஜலஜா.

''மிக்க நன்றி..... என் விஸிட்டிங் கார்டு இதோ! டெலிபோன் நம்பரும் அதில் இருக்கிறது. எப்போது விருப்பமோ அப்போது கூப்பிடுங்கள். தப்பாமல் வருகிறேன்!'' என்றான் மகேஷ்.

ஜலஜா அந்த 'விஸிட்டிங் கார்டை'த் தன் கைப் பையில் பத்திரப்படுத்திக் கொண்டாள்.

தாயை இழந்திருந்த ஜலஜாவின் மேல் அவள் தந்தைக்குப் பாசம் அதிகம். சிறு வயதிலிருந்து அவள் கேட்டதை வாங்கித் தர அவர் தயங்கியதில்லை. அவள் தன் விழியை இலேசாக அசைத்தால் போதும் — அவள் எண்ணத்தை நிறைவேற்றி வைக்கத் தயங்க மாட்டார் அவர் தந்தை.

வீட்டுக்குத் திரும்பிய ஜலஜா தன் கையிலிருந்த 'விஸிட்டிங் கார்டை'த் தன் தந்தையிடம் கொடுத்தாள்.

''யாரம்மா, இந்த மகேஷ்?''

''அதில்தான் போட்டிருக்கிறதே!'' — என்றாள் ஜலஜா நாணத்துடன்.

''ஆமாம், ஏதோ கம்பெனியில் உதவி மானேஜர்....'' என்றார் அவர் அலட்சியமாக.

''ஏதோ ஒரு கம்பெனி இல்லை. பெரிய கம்பெனி....வீட்டுக்கு வேண்டிய பம்பு செட் விற்பனைக்கு வைத்துக் கொண்டிருக்கிறார்கள்'' என்றாள் ஜலஜா சற்றுச் சினத்துடன்.

''இருக்கட்டுமே, அம்மா! நம் வீட்டில் இப்போது பம்புசெட் ஏதும் கெட்டுப் போகவில்லையே!'' என்றார் தந்தை புரியாமல்.

''இருப்பது இருந்துவிட்டுப் போகிறது. இன்னும் ஒன்று வாங்கினால் போகிறது....'' என்றாள் ஜலஜா.

''என்னம்மா, விளையாட்டு இது!'' என்று சலித்துக் கொண்டார் தந்தை.

''அவரைக் கூப்பிட்டுப் பேசித்தான் பாருங்களேன். உங்களுக்குப் பிடிக்கும்....'' என்றாள் ஜலஜா வெட்கத்துடன்.

''எதைப் பிடிக்கும்? பம்ப் செட்டையா? அல்லது...'' என்று கேட்டார் அவர்.

''போங்கள்.... உங்களுக்கு உண்மையில் புரியவில்லையா? அல்லது புரிந்து கொண்டு தான் தெரியாதது போல் நடிக்கிறீர்களா ?'' என்று கேட்டாள் ஜலஜா.

அவள் தந்தைக்கு அப்போது நன்றாகப் புரிந்தது. எத்தனையோ [illegible]வகையில் உயர்ந்த சம்பந்தங்கள் வீடு தேடி வந்தபோது ஒதுக்கி விட்ட தன் பெண் — பெரிய பெரிய இடங்களைத் துச்சமாக மதித்த தன் மகள் — யாரோ ஒருவனைத் [illegible]கிறாள்.

''புரிந்து [illegible] அம்மா புரிந்து விட்டது!'' என்று தலையை ஆட்டினார் அவர். அவர் கை தானாக டெலிபோனை நாடியது.

மகேஷின் கம்பெனி டைரக்டர்களில் சிலர் சென்னையில் இருந்தார்கள். அவர்களுடன் பேசிய அவர், அவன் ஆபீஸ் பைலிலிருந்து அவனைப் பற்றிய முழு விவரங்களையும் அறிந்து கொண்டார். ஏதோ ஒரு 'குரூப்' போட்டோவிலிருந்த அவன் முகத்தையும் உற்றுக்கவனித்தார். அவருக்கும் அவனைப் பிடித்தது.

இரண்டு நாட்கள் கழித்து அவரே மகேசை நேராக டெலிபோனில் அழைத்தார்.

''[illegible]யில் உங்களைப் பார்த்ததாக என் [illegible] சொன்னாள்'' என்று அவரே பேசியதும் அவனுக்குக் கவனம் வந்தது. தான் அவர்கள் வீட்டுக்கு வர ஒப்புக் கொண்டான்.

அவர் வீட்டுக்குப் புறப்பட்ட மகேஷ், தன் கம்பெனி சம்பந்தமான விவரங்களையும் எடுத்துக் கைப்பையில் வைத்துக்கொண்டான்.

ஜலஜாவே அவனை வாசலில் வரவேற்றாள். தன் தந்தை இருக்குமிடம் அழைத்துச் சென்றாள். ஜலஜாவின் தந்தை அவனை உட்காரும் படி உபசரித்ததும், மகேஷ் தன் கைப் பையைத் திறந்து தன் கம்பெனி தயாரிப்புக்கள் பற்றிய விவரங்களை எடுக்க யத்தனித்தான். தம் கையை அமர்த்தி அவர் தடுத்தார்.

''அதெல்லாம் ஏதும் தேவையில்லை. கிராமத்திலுள்ள உங்கள் பெற்றோரின் வீட்டு விலாசம் இருந்தால் போதும்!''

ஜலஜா வெட்கத்துடன் பக்கத்து அறைக்குப் போனாள்.

''என் வீட்டு விலாசமா? எதற்கு?''

''பெண்ணைப் பெற்றவர்கள் உங்களைப் போன்ற பிரமசாரிகளின் விலாசத்தைப் பற்றிக் காரணம் இல்லாமல் விசாரிப்பார்களா என்ன?'' என்று கேட்டுப் பெரிதாகச் சிரித்தார் அவர்.

மகேஷ் விழித்தான்.

''எந்தவிதத் தயக்கமோ யோசனையோ தேவை இல்லை. ஜலஜாவுக்குப் பூரண சம்மதம்.... எனக்கு....? அன்று உங்கள் முகத்தைப் போட்டோவில் பார்த்தபோதே 'ஓகே.' சொல்லி விட்டேன். இப்போ பேசறதுக்கு என்ன இருக்கு? உங்கள் பெற்றோரிடம் ஒரு வார்த்தை சொல்ல வேண்டியது.... அப்புறம் முகூர்த்தத்துக்கு ஒரு நாள் பார்க்க வேண்டியது'' என்று அவர் பேசிக் கொண்டே போனார்.

மகேஷ் தன் இருக்கையை விட்டு எழுந்தான். ''மன்னிக்க வேண்டும். நீங்கள் ஒரு முக்கிய விஷயத்தை மறந்து பேசுகிறீர்கள்.''

''ஞாபகப்படுத்துங்கள். உடன் நிறைவேற்றி வைக்கிறேன்!'' என்றார் உற்சாகமாக.

''இந்த ஏற்பாட்டுக்கு என் சம்மதமும் அவசியம் என்பதை நீங்கள் நினைத்துப் பார்க்கக்கூட இல்லையே !''

''உங்கள் சம்மதமா?.... நல்ல 'ஜோக்' ஐயா இது.... என்னுடன் சம்பந்தம் வைத்துக் கொள்ளக் கசக்குமா?''

''அதில்லை, ஸார் ! பொருட்காட்சியில் நான் சந்தித்து மறுகணம் மறந்து போன ஆயிரக்கணக்கான நபர்களில் தங்கள் குமாரியும் ஒருத்தி. ஆனால் என் நெஞ்சில் முழு இடம் பெற்ற பெண் ஒருத்தி இருக்கிறாள். அவள் யார் என்று என்னைப் பெற்றவர்களுக்கும் தெரியும்..... அவர்களின் பரிபூரண ஆசியும் உண்டு......'' தன் சொந்த ஊர் பள்ளிக்கூடத் தலைமை ஆசிரியரின் மகள் லலிதாவின் முகம் மகேஷின் மனக் கண் முன் விரிந்தது.

''உம்....'' என்றார் அவர் அலட்சியமாக. ''இப்படியெல்லாம் இருப்பது, நினைப்பது சிறு வயதில் சகஜம்தான். ஒரு நல்ல சந்தர்ப்பம் அமையும்போது தடைகளைப் பொருட்படுத்தாமல் முன்னேறுவதுதான் உங்களைப் போன்ற வாலிபர்களுக்குப் புத்திசாலித்தனம். பெருமை தரக் கூடியதும்கூட....'' என்று உபதேசிக்கத் தொடங்கினார்.

தன் சுய கௌரவம் அவமதிக்கப்படுவதாக நினைத்தான். ''ஸார்! என் சம்மதம் இதற்கு இம்மியும் இல்லை'' என்றான் அவன்.

ஜலஜாவின் தந்தை யார் மறுத்துப் பேசிக் கேட்டும் அறியாதவர். ஆகவே, அவர் ஆத்திரமும் கோபமும் பொங்கி எழப் படபட என்று பொரிந்தார். ''நீங்கள் இப்போது என் மகளை மட்டும் மறுக்கவில்லை. உங்கள் உன்னதமான எதிர்காலத்தையும் எட்டி உதைக்கிறீர்கள்'' என்றார்.

''ஒருசில காசுகளுக்காக என் மனச்சாட்சியை அடகு வைக்க நான் தயாராக இல்லை'' என்று உறுமினான் மகேஷ்.

அவன் போன பிறகு ஜலஜா வந்தாள். அவள் முகத்தில் காளியின் குரூரம் தெரிந்தது.

''அப்பா ! இந்த இங்கிதம் கெட்ட மடையனுக்குச் சரியான பாடம் கற்பிக்க வேண்டும். உங்கள் காலில் அவன் வந்து விழ வேண்டும். நீங்கள் அவனை எட்டி உதைப்பதை நான் பார்த்து ரசிக்க வேண்டும் !''

''ஆகட்டும், அம்மா ! செய்து காட்டுகிறேன்!'' என்று சொல்லிய அவர் தம் முன் இருந்த 'டீப்பாயை' உதைத்துத் தள்ளினார்.

அவர் — அந்தப் பெரிய மனிதர் — ஜலஜாவின் தந்தை — மாஜி நீதிபதி ஸ்ரீசைலம் — அவரே தேர்வுக் குழுவின் தலைவர் !

ஸ்ரீசைலம் பம்பாய்க்குப் புறப்பட்டுப் போய்க் கொண்டிருந்தார். தேர்வுக்கு வருகிறவர்களின் பட்டியல் அவர் கைப் பையில் இருந்தது. அதில் கண்ட மகேஷின் பெயர் அடியில் சிவப்புப் பென்சிலால் தடித்த கோடு போடப்பட்டிருந்தது

மகேஷ் அவரை மறுத்துப் பேசிய நாள் முதல் அவனைத் தன் எதிரியாகவே பாவித்

இன்னுமொரு குழந்தையைப் பெறுவதற்குமுன் சற்று

# யோசியுங்கள்

முதலில் இந்தக்
குழந்தையை நன்றாக
வளர்க்க வேண்டாமா?

இக்குழந்தையை நன்றாக படிக்க வைக்க வேண்டாமா? உங்கள் விருப்பப்படி, குழந்தைக்கு வசதிகள் அனைத்தும் அளிக்க வேண்டாமா? இன்னொரு குழந்தையை உடனே பெற்றால், இதெல்லாம் முடியுமா? சிரமம் தான். அடுத்த குழந்தை உடனே வேண்டாம் என்று நீங்கள் கருதுவது இயற்கைதானே.

நீங்கள் மட்டுமல்ல; உலகெங்கிலும் தம்பதிகள் இவ்விதம்தான் கருதுகிறார்கள். வளமுடன் வளர்க்க வசதிகள் பெருகும் வரை, அவர்கள் இன்னொரு குழந்தையைப் பெறுவதில்லை; நீங்களும் 'நிரோத்' உபயோகித்து குழந்தை பெறுவதைத் தள்ளிப்போடலாம். அனைவரும் விரும்பி ஏற்கும் ஏப்பர் கருத்தடைச் சாதனம் நிரோத்; இது ஆண்களுக்கானது. தலைமுறை தலைமுறையாக உபயோகத்தில் இருந்துவரும் சிறந்த, எளிய, பாதுகாப்பான கருத்தடைச் சாதனம் நிரோத். நீங்களும் நிரோத் உபயோகியுங்கள்.

நிரோத் எங்கும் கிடைக்கிறது. அரசாங்க ஆதரவு விலை 15 பைசாவுக்கு 3



இன்னொரு குழந்தையை வளர்க்க வசதி பெறும் வரை
உபயோகியுங்கள்

## நிரோத்

லட்சக்கணக்கான பேர் விரும்பி ஏற்கும் எளிய, பாதுகாப்பான கருத்தடைச் சாதனம் நிரோத்.

davp 71/460

பலசரக்குக் கடைகள், மருந்தகங்கள், வெற்றிலைபாக்குக்கடைகள் இங்கெல்லாம் நிரோத் விற்பனையாகிறது



"இந்து, எக்ஸ்பிரஸ், மெயில், தினத்தந்தி, மாலை முரசு, அலைஓசை, நவமணி, நவசக்தி, நாத்திகம், தினமணி, முரசொலி, தென்னகம் எல்லாவற்றையும் ஓசியில் படித்துவிட்டீர்களே! எதையாவது காசு கொடுத்து வாங்கமாட்டீரோ?"
"சரி! சுதேசமித்திரன் ஒன்று தா!"

---

தான் ஜலஜா. தேர்வுக்கு வருகிறவர்களில் மஹேஷும் ஒருவன் என்று தெரிய வந்ததும், அவள் தன் தந்தைக்குத் தாபம் போட்டாள்.

"இதில் அவன் ஜெயிக்கக் கூடாது. நேர் முகப் பேட்டியில் அவனைத் தலைகுனிய வைக்க வேண்டும்!" என்று வேண்டினாள் ஜலஜா.

ஒரே ரயிலில் வெவ்வேறு பெட்டிகளில் மஹேஷும் ஸ்ரீசைலமும் பிரயாணம் செய்தார்கள். மஹேஷின் முகத்தில் பொலிவு இல்லை. ஸ்ரீசைலத்துக்குப் பயந்து பெட்டியிலிருந்து ஒதுங்குவது தன்மானத்துக்கு இழுக்காகப் பட்டது அவனுக்கு. ஸ்ரீ சைலம் தம் முஷ்டியை மூடி மூடித் திறந்து உள்ளே மஹேஷ் நொறுங்கிப் போவது போல் கற்பனை செய்து மகிழ்ந்தார்.

கிட்டத்தட்ட எண்பது பேருக்கு மேல் பேட்டிக்கு வந்திருந்தார்கள். உள்ளே போனவர் எவரும் ஐந்து நிமிஷங்கள்கூடத் தாமதிக்கவில்லை. வெளியே வந்த எவர் முகத்திலும் மகிழ்ச்சி இல்லை.

மஹேஷின் முறை வந்தது. உள்ளே நுழைந்ததும் ஸ்ரீசைலத்தின் விழிகள் அவனைச் சந்தித்தன. தன்னைக் குத்தி எடுக்கும் பார்வை அது என்பதை உணர்ந்தான். ஒருகணம் தாமதித்த அவன் தைரியத்துடன் வணக்கம் தெரிவித்து, எல்லாருடைய கைகளையும் குலுக்கி, அனுமதி பெற்று உட்கார்ந்தான்.

தேர்வுக் குழுவில் இருந்த மூவரும் அவனை ஒவ்வொரு கேள்வி கேட்டார்கள். கேள்வி முடிந்த மறுகணம் மஹேஷிடமிருந்து பதில் வெடித்தது. ஸ்ரீசைலத்தைத் தவிர மற்றவர்கள் வியந்து போனார்கள். அவர்களில் ஒருவர் அவன் போகலாம் என்று ஜாடை காட்டினார்.

"இருங்கள்" என்று தடுத்தார் ஸ்ரீசைலம். அவனுக்காகவே அவர் தயாரித்து வைத்திருந்த வினாத் தாள் அவர் கண் முன் விரிந்தது. அடுத்த அரை மணி நேரம் சரமாரியாகக் கேள்விகள் கேட்டார். பதிலுக்கு மறு கேள்வி போட்டார். குத்தலாக இரண்டு பொருள் தொனிக்கக் கூடிய வகையில் பேசிக் கேலி செய்தார். பிரபல வழக்கறிஞர் சாட்சியை மடக்குவதுபோல் அடுக்கடுக்காக மாற்றி மாற்றிக் கேட்டார்.

மஹேஷ் பதில் சொன்னான். சில வினாக்களுக்குத் தயங்கியவாறு விடை கூறினான். இன்னும் சில வினாக்களுக்குத் தனக்குப் பதில் தெரியாது என்பதைப் பணிவுடன் ஒப்புக் கொண்டான்.

ஸ்ரீசைலத்தின் கூட இருந்தவர்கள் முகத்தில் தளர்ச்சியின் விளைவாக அதிருப்தியின் நிழல் படிவதை மஹேஷால் அனுமானிக்க முடிந்தது. அரை மணிக்கு மேலே ஆன பிறகு தான் அவன் வெளியே வந்தான். சுற்றியிருந்தவர்கள் விசாரித்தார்கள்.

தன் தலையை உலுக்கி உதட்டைப் பிதுக்கி விட்டு மஹேஷ் வெளியே போனான். நிச்சயமாக அவன் வெற்றி பெறமாட்டான். நீதிபதிகளில் இருவருக்கு ஏற்பட்ட நல்லெண்ணத்தை மாற்றுவதில் ஸ்ரீசைலம் வெற்றி கண்டு விட்டார் என்பது தெரிந்தது.

சென்னை விமான நிலையத்தில் காத்திருந்தாள் ஜலஜா. காரில் ஸ்ரீ சைலத்துடன் ஏறி உட்கார்ந்ததும் அவள் கேட்ட முதல் கேள்வி: "அந்தக் கர்வம் பிடித்தவன் வந்தானா? அவனுக்குப் பாடம் கற்பித்தீர்களா?"

"வந்தான் அம்மா! அவனைக் கசக்கிப் பிழிந்துவிட்டேன்......!"

"நன்றாக வேண்டுமப்பா அவனுக்கு. ஸெலக்ஷன் ஆகவில்லையே?" என்று பெருமிதத்துடன் சாய்ந்து கொண்டாள் ஜலஜா.

ஸ்ரீசைலம் மௌனமானார்.

"என்னப்பா, பதிலைக் காணோம்?...."

"உன்னிடம் நான் முதலில் ஒன்று கேட்க வேண்டும்..... நீ பதில் சொல்.... உன்னை மணக்க அவன் ஒப்புக் கொண்டான்.... நீ என்ன சொல்கிறாய்?"

"நோ!" என்று கத்தினாள் அவள். "அந்த அகம்பாவக்காரன் முகத்தைப் பார்க்கவே நான் விரும்பவில்லை!" என்றாள் அவள்.

"அப்படியானால் அவன் எப்படிப் போனால் நமக்கென்ன? அங்கே நீதிபதி நாற்காலியில் உட்காரும் போது என் மனத்தில் குரோதம் இருந்தது. அவனைப் பார்த்தவுடன் எனக்கு ஆத்திரம்கூட ஏற்பட்டது. ஆனால் அவன் பதில்களில் தெரிந்த திறமை, அவன் விடையளித்த அந்த விநயமான பாணி — உபயோகித்த சொற்களில் மிளிர்ந்த லாகவம், தெரியாததை ஒப்புக் கொண்ட பணிவு — எல்லாமே என்னைக் கவர்ந்தன. உன் அப்பாவாக நான் அங்கு போகவில்லை என்ற நினைவு வந்தது. நல்லதொரு நீதிபதியாக என் கடமையைச் செய்துவிட்டு வந்தேன்" என்றார்.

ஜலஜா ஆத்திரத்துடன் ஆக்ஸிலேட்டரை அழுத்தினாள். வண்டி சீறிப் பாய்ந்தது.

மஹேஷின் மானேஜர் அன்றையத் தபால்களைப் பிரித்துக் கொண்டிருந்தார். ஒன்று — தேர்வில் மஹேஷ் தேர்ந்தெடுக்கப்பட்ட செய்தியைத் தாங்கியிருந்தது. அடுத்தது? தான் தேர்ந்தெடுக்கப்படமாட்டோம் என்ற ஏமாற்ற நினைவில் தன் வேலையை ராஜிநாமா செய்திருந்த மஹேஷின் கடிதம். 'வெண்ணெய் திரண்டபோது தாழி உடைவானேன்?' என்று மானேஜர் புரியாமல் தவித்தார்.

# இன்றைய பிரச்சினை 12

(பஸ் கண்டக்டர் இரட்டை 'விசில்' அடிக்கிறார். நிற்க வேண்டிய இடத்தை விட்டு நாற்பது, ஐம்பது கெஜ தூரம் ஓட்டிக் கொண்டு போய் நிறுத்துகிறார், ஓட்டுநர்! பஸ் நிலையத்தில் காத்திருக்கும் பயணிகளுக்கு ஒரே எரிச்சல்! இது போன்ற பிரச்னைகள் தீர என்ன வழி? இந்தத் துறையில் பழுத்த அநுபவமுள்ள திரு நா. மகாலிங்கம் கூறும் கருத்துக்களைப் பார்ப்போமே?)



நகர பஸ் போக்குவரத்து நிர்வாகத்தினை மீண்டும் தனியாரிடமே விட்டு விட்டால் இப்பிரச்னைக்கு விடை காண முடியுமா?

முடியாது. மக்கள் தொகை பெருகி விட்டது. தொழில்கள் பெருகியுள்ளன. கல்லூரிகள், பள்ளிகள், அலுவலகங்களின் எண்ணிக்கையும் முன்னைக் காட்டிலும் கூடுதலாகி விட்டது. தனியாராலும் பஸ் நிர்வாகத்தின் மூலம் மட்டும் போக்குவரத்துப் பிரச்னையைச் சமாளித்துவிட முடியாது.

மீண்டும் டிராம் வண்டிகளை ஓடச் செய்வது பலன் அளிக்குமா?

அதற்கு முதலீடு மிகக் கூடுதலாகத் தேவைப்படும். முன்பு டிராம் வண்டிகளை எடுக்க முடிவு செய்யப்பட்டதே—அதுவே தவறு. இப்போது டிராம் வண்டிகளை மறுபடியும் புகுத்துவதற்கான செலவுக்கு மின்சார ரயில் வண்டிகளையே ஓடச் செய்யலாம். மின் ரயில் வண்டிகள் போக்குவரத்துப் பிரச்னை தீரக் கணிசமான அளவு உதவும். அவை வேகமாக இயங்குவதாலும், அதிகப் பயணிகள் ஏறிச் செல்ல வாய்ப்பு அளிப்பதாலும், நகரப் போக்குவரத்தைச் சமாளிக்கப் பெருமளவுக்கு உதவும்.

நகரின் எந்தப் பகுதிகளில் மின் வண்டிப் பாதைகளைப் புதிதாக அமைக்கலாம் என்று கருதுகிறீர்கள்?

எழும்பூரிலிருந்து தாம்பரம் வரை இப்பொழுது ஓடுகின்றன அல்லவா? அவ்விதமே எழும்பூரிலிருந்து நகரின் நாலா திசைகளிலும் மின் வண்டிப் பாதைகள் அமைக்க வேண்டும். எழும்பூர் நிலையத்தையே மத்திய கேந்திரமாக வைத்துக் கொள்ளலாம். மணலி, மகாபலிபுரம், பூந்தமல்லி முதலிய இடங்களுக்கெல்லாம் எழும்பூரிலிருந்து மின்சார ரயில்கள் ஓட வகை செய்தால் போக்குவரத்துப் பிரச்னை தீருவது எளிது.

இதில் யாருக்காவது எவ்வகையிலேனும் அசௌகரியம் ஏற்படக் கூடுமா?

ஏற்படலாம். பல வீடுகள், அலுவலகக் கட்டடங்களை இடிக்கும்படி நேரிடலாம். நீண்டகால வசதி, பெருவாரியான மக்களுக்காகச் செய்யப்பட வேண்டுமென்றால் இது போன்ற சிக்கல்களைப் பொருட்படுத்தக் கூடாது.

## டபிள் ரைட் தொல்லையும் பொறுமையின் எல்லையும்!

லண்டன், பாரிஸ் நகரங்களில் உள்ளதைப் போன்று பூமிக்கு அடியில் மின் ரயில் (Tube Trains) அமைப்பது சாத்தியமா?

நெரிசல் அதிகமாக உள்ள இடங்களில் சுரங்க ரயில் பாதைகள் அமைக்கலாம். நெரிசல் இல்லாத இடங்களில் தரை மட்டத்திலேயே ரயில்களை ஓட்டலாம்.

பஸ்களின் எண்ணிக்கையைப் பெருக்கலாம் அல்லவா?

ஓரளவுக்கு மேல் அது சாத்தியமன்று. சாலைகளில் நெருக்கடி அதிகமாகிவிடும். விபத்துக்களும் பெருகக் கூடும். மேலும் இப்பொழுது பல புதிய 'ரூட்'களில் பஸ்கள் விடுவதால், எண்ணிக்கையைப் பெருக்குவதிலும் சிரமம் உள்ளது.

டில்லியில் 'மினி பஸ்' விடுகிறார்களாமே? இங்கும் அதனைப் புகுத்தினால் என்ன?

'மினி' பஸ்ஸினாலும் பிரச்னை தீர்ந்துவிடாது. ஒரு 'மினி' பஸ் விலை 45,000 ரூபாய் ஆகும். அதன் மதிப்புக் குறைவு (Depreciation) நாள் ஒன்றுக்கு 150 ரூபாய் என்று கணக்கிட்டால், ஓட்டும் செலவு (Operating Cost) டிரைவர் சம்பளம், எண்ணெய் விலை இவற்றை எல்லாம் சேர்த்துக் கணக்குப் பார்த்தால் ஒரு நபருக்கு ஒரு கிலோமீட்டர் தூரத்துக்குக் கால் ரூபாய்க்குக் குறையாமல் கட்டணம் வசூலிக்கும்படியிருக்கும். பஸ் கட்டணத்தை விட இது மிக அதிகம். மக்கள் அந்த அளவு கொடுத்து ஆதரிப்பார்களா என்பது ஐயமே.

வேறு என்ன புதிய வழிகளைக் கையாண்டு போக்குவரத்துப் பிரச்னையைச் சமாளிக்கலாம் என்று நீங்கள் கருதுகிறீர்கள்?

மின்சார ரயில்கள்தாம் பிரச்னையைக் கணிசமாகத் தீர்க்க முடியும். அதற்குத் துணையாக பஸ்கள் இயங்கலாம். கூவம் நதியைச் செப்பனிட்டு வருகிறார்கள். அதன்



லண்டனில் உள்ள சிறைக் கைதிகள் ஒரு தொழிற்சங்கம் அமைத்துக் கொண்டிருக்கிறார்கள். முதல் கோரிக்கை - சிறைத் தண்டனையை ஒழிக்க வேண்டும்!

டைம்ஸ் ஆப் இந்தியா

-- மாலி

அகலத்தை இன்னும் சற்று அதிகப்படுத்தியிருந்தால், படகுகள் விடலாம். உல்லாசப் படகுகள் மட்டும்விட இந்த அகலம் போதும். அகலம் மேலும் கூடுதலாக இருந்தால் போக்குவரத்துப் பிரச்னையைத் தீர்க்கவும் படகுகளை விடுவது சாத்தியமாகும். பக்கிங்ஹாம் கால்வாயினைச் செப்பனிட்டால் சாமான்களின் போக்குவரத்துக்கு மிகவும் பயன்படும். அடையாறு ஓடுகிறதே — அதையும் போக்குவரத்துக்குப் பயன்படுத்திக் கொள்வது பற்றி யோசிக்கலாம்.

பயனுள்ள யோசனைதான். இவையெல்லாம் நீண்ட கால அல்லது வருங்காலத் திட்டங்கள். இப்போதுள்ள நிலையில், பஸ் வசதிகளைப் பெருக்குவது, அபிவிருத்தி செய்வதன் மூலமே இப்பிரச்னைக்கு உடனடியான அல்லது தாற்காலிகமான பரிகாரம் காண முடியும் என்று தோன்றுகிறது. நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

சாலைகளில் நெருக்கடியைத் தவிர்ப்பது பயனளிக்கும். மதுரை, கோவை முதலிய நகரங்களில் கடை முதலாளிகள் முன்பெல்லாம் நடந்தோ, பஸ்ஸிலோ வருவார்கள். இன்று ஒவ்வொரு கடை வாசலிலும் முதலாளியின் கார் நிற்கிறது. சென்னை நகரிலும் இந்நிலை சகஜமாக உள்ளது. கார்களை நிறுத்த அங்கங்கே 'காரேஜ்' (Garage) கட்டுவதன் மூலம் சாலைகளில் இட நெருக்கடியைத் தவிர்க்கலாம். மேலை நாடுகளில் உள்ளவை போன்று கார்களை நிறுத்த, பல அடுக்குக் கட்டடங்களை நிர்மாணித்து வாடகை வசூலிக்கலாம். மலேசியாவில் இவ்விதம் கட்டணம் வசூலிக்கும் வேலையைப் பகுதி நேர வேலையாக மாணவர்கள் செய்து சம்பாதிக்கின்றனர். கட்டடங்கள் கட்டி மீட்டர் அமைத்துக் காருக்கு வாடகை வசூலிக்கும் உரிமையைத் தனியார் துறைக்கு விட்டுவிடலாம். சிறு தொழில் அல்லது நடுத்தரத் தொழில் மாதிரி இவற்றுக்கும் அரசு கடன் கொடுத்து உதவலாம். ஓடு வேய்ந்த சிறிய கடைகள், வீடுகள் இவற்றை நஷ்டஈடு கொடுத்து வாங்கி அந்த இடங்களில் கார்கள் நிறுத்துவதற்கான கட்டடங்களை அமைக்கலாம்.

லாரிகள் அதிக இடத்தை ஆக்கிரமித்துக் கொண்டு விடுகின்றனவே? குறிப்பாக நெரிசல் அதிகமாகவுள்ள வடசென்னைப் பகுதியில் நீங்கள் பார்த்திருப்பீர்களே?

லாரி போக்குவரத்தினைப் பகல் நேரத்தில் தடை செய்துவிட வேண்டும். சரக்குப் போக்குவரத்து இரவு நேரத்தில் மட்டுமே நடைபெற வேண்டும். கட்டை வண்டிகளும் கூடத்தான். வட சென்னைப் பகுதியில் முப்பது பேர் உட்காரக்கூடிய பஸ்களை ஓட்டலாம். இன்று ஓடும் பெரிய பஸ்கள் நெரிசல் மிகுந்த அப்பகுதிக்கு ஏற்றவையன்று.

இரவில் 9-30, பத்து மணிக்கு பஸ்களின் ஓட்டம் அறவே நின்றுவிடுவதால் மக்களுக்கு இரவில் வெளியே செல்ல வசதியில்லை. கல்கத்தா நகரில் நள்ளிரவுக்குப் பிறகும் டிராம் வண்டிகளும், ஏராளமான டாக்ஸிகளும் ஓடுவதால் நகரம் 'ஜே ஜே' என்று இருக்கிறது. இங்கு முன்னிரவிலேயே சந்தடி அடங்கி விடுகிறதே?

சென்னையிலும் இரவு பன்னிரண்டு மணி வரை பஸ்களை ஓட்டலாம். 'ஷிப்ட்' முறையை அநுசரிப்பதன் மூலம் இது சாத்தியமாகும். டாக்ஸிகளுக்கு 'வயர்லெஸ்' சாதனம் அமைப்பது நல்லது. இன்ன தெருவில் இன்ன வீட்டில் டாக்ஸி தேவைப்படுகிறது என்பதை டாக்ஸி நிறுவனம் 'வயர்லெஸ்' செய்தியாக அனுப்பலாம். ஒரே நிறுவனத்தின் கீழ் பல டாக்ஸிகள் இருந்தால் இது சாத்தியமாகும். எந்த இடத்தில் டாக்ஸி சவாரியின்றி நின்றுள்ளது என்பதை அறிந்து, தேவையுள்ள இடங்களுக்கு அனுப்பி வைப்பது சாத்தியம். கூட்டுறவு முறையில் அமைந்துள்ள டாக்ஸி நிறுவனங்களும் இம்முறையைக் கையாண்டு பயனடையலாம். மக்களுக்கும் சௌகரியமாயிருக்கும்.

வேறு யோசனைகள் ஏதாகிலும் கூற விரும்புகிறீர்களா?

போக்குவரத்து மிகுதியாயுள்ள இடங்களில், மக்கள் சாலையைக் கடக்க வெள்ளைக் கோடுகள் போட்டு வைத்திருக்கிறார்கள். சில இடங்களில் சுரங்கப் பாதைகளும் உள்ளன. மேம்பாலங்களை நிறைய அமைப்பதும் வரவேற்கத்தக்கது. இதற்குச் செலவும் அதிகம் ஆகாது; மக்களுக்கும் நிரம்பப் பாதுகாப்பு உண்டு. எந்தெந்த 'ரூட்'களில் எந்த நேரத்தில் போதிய அளவு பஸ் நிரம்புவதில்லை, எந்த ரூட்களில் இன்னும் அதிக பஸ்களை ஓட்டலாம் என்பதையெல்லாம் விரிவாக ஆராய்ந்து தக்க நடவடிக்கைகள் எடுத்து அபிவிருத்தி செய்ய வேண்டியதும் அவசியமே.

மதுரை, திருச்சி முதலிய இடங்களுக்குச் சென்னையிலிருந்து இரவு நேரத்தில் தனியார் பஸ்கள் சில காலம் வரை ஓடிக் கொண்டிருந்தன. அவை பார்க்க அழகாக இருந்ததுடன், உட்காரவும் வசதியாக இருந்தன. கட்டணமும் அப்படியொன்றும் அதிகமில்லை. சர்க்கார் பஸ்களில் அவ்வளவு வசதியில்லை. தனியார் ஓட்டிய பஸ்களை ஏன் தடை செய்து விட்டார்கள்?

அவை 'டூரிஸ்டு'களுக்காக ஏற்பட்டவை. அந்த வண்டிகளை அவர்கள் எக்ஸ்பிரஸ் பஸ் மாதிரி ஓட்டிக் கொண்டிருந்தனர். உல்லாசப் பயணிகளுக்காக அளிக்கப்பட்ட சலுகையை வேறு வழிகளில் பயன்படுத்திக் கொள்வது சட்டத்துக்கு மாறானதல்லவா? அதனால் தான் நிறுத்திவிட்டார்கள். ஆனால் அம்மாதிரி வசதியான, அழகான பஸ்களை அரசினரே விடலாமே என்று மக்கள் எதிர்பார்ப்பதில் தவறில்லை. இரவுப் பயணத்துக்கு வசதியான இருக்கை வேண்டியது அவசியமே.

பேட்டி: பாணன்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# ANNOUNCING!

The sale of

## BLENDED AND FANCY FABRICS

made by mixing cotton and

## GRASIM STAPLE FIBRE

from to-day at

**AKASH-DEEP, SANDHURST BRIDGE, CHOWPATTY**

- Attractive Fancy Dress material for ladies
- Immaculate Bush Shirtings for gents
- Decorative Tapestry and Curtain materials
- Priced cheaper than cotton fabrics



**GWALIOR RAYON SILK MFG. (WVG.) CO. LTD., BIRLAGRAM, NAGDA(M.**

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon இலங்கையில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)